உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 22 } தாது௵ மார்கழிமீ ௧௨ } பகுதி 6
1936௵ டிசம்பர்மீ 15௳

## கடவுள் வணக்கம்.

அன்றுமுதல் இன்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந் திங்கு யாதனையால் அழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே யெடுத்த தேகம்
எப்போதோ தெரியாதே இப்போ தேதான்
துன்றுமனக் கவலைகெடப் புலனா யேனைத
தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது
சென்றிடவே பொருளை வைத்த நாவலோய்நஞ்
சிவனப்பா என்றஅருட் செல்வத் தேவே. (1)

வேண்டுவ படைத்தாய் நுந்தை
விதிப்படி புரந்தான் அத்தைக்
காண்டக அழித்தான் முக்கண்
கடவுள்தான் இனைப ஆற்றல்
ஆண்டவன் எவனோ என்ன
அறிகிலாது அகில நீயே
ஈண்டிய அல்லல் தீர
எம்மனோர்க்கு இயம்பு கண்டாய். (2)

அத்தனைச் சிற்றம்பலவனை யென்னுயி ராகின்ற
சுத்தனைச் சுத்த வெளியா னவனைச் சுகவடிவாம்
நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை
எத்தனைநாள் செல்லுமோ மனமேகண்டு இறைஞ்சுதற்கே. (3)

கண்டவடி வெல்லா(ம்)நின் காட்சியென்றே கைகுவித்துப்
பண்டுமின்றும் நின்றவென்னைப் பார்த்திரங்க வேண்டாவோ. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால், பரமாசாரியர்களைத் துணை கொண்டால்தான் முத்திப் பேறு கிட்டும் என அறிவிக்கிறார்.

(இ-ள்) சீகாழிப்பதியில் அவதரித்த திருஞான சம்பந்தப் பெருமானே! இறைவனை தூது செல்லும்படியான பாக்கியத்தைப் பெற்ற சுந்தர மூர்த்தியே! நம்பெருமானாகிய சிவபிரான் 'அப்பா' என அழைத்தருளப் பெற்ற திருவருட் செல்வராகிய திருநாவுக்கரசே! படைப்புக் காலந்தொட்டு இன்று வரை கோடிக் கணக்கான பிறவிகளையெடுத்து எடுத்து, இப்பூவுலகில் துன்பமுற்று அழிந்தது அல்லாமல், இன்றளவும் மோட்ச மடைதற்கு வாய்ப்பு ஏற்படாமலே இருந்து வருகிறது; ஆதலால், இருவினைக்கீடாக எடுத்த உடம்பு அழிவது எப்பொழுதோ திட்டமாகத் தெரியாது; ஆகையால், இப்பொழுதே மிகுந்த மனவருத்தம் நீங்க, கேவல நிலைமையிலுள்ள நாய்போன்ற அடியேனை, ஆட்கொண்டருள வேண்டும். (எ-று.)

இரு வினைகளும் நீங்கும்வரை ஜீவாத்மா எடுக்கும் பிறவிகளுக்கு அளவில்லை என்பார், "அன்றுமுதல் இன்றைவரைச் சனனகோடி அடைந்து அடைந்து" என்று ஆசிரியர் இப்பாட்டில் தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

2. இதனால் மும்மூர்த்திகளில் முதல்வன் எவனென சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமமாவையே வினவுகிறார்.

(இ-ள்.) நான்முகத் தேவே! ஆன்மாக்களுக்கு வேண்டுவனவாகிய தநு கரண புவன போகங்களைப் படைத்தாய்! உன் தந்தையாகிய மகாவிஷ்ணு காக்கவேண்டிய முறைமைப்படி பாதுகாத்தான்; அவைகளை முக்கண் மூர்த்தியாகிய சிவபெருமான் யாவருங் காணும்படியாக அழித்தொழித்தான்; இத்தன்மையால், இம் மும்மூர்த்திகளில் முழுமுதற்பெருங் கடவுள் எவன் என அறியாது மக்கள் மயங்குகிறார்கள்; ஆதலால், சிருஷ்டி கர்த்தாவாகிய நீயே, இவ் வையத்தைத் தீர்த்தருள்வாயாக. (எ-று.)

வேதாகம சாஸ்திர இதிகாசங்க ளெல்லாம் சர்வசங்கார காரணனாகிய சிவபெருமானே முழுமுதற் கடவுள் எனப் பறைசாற்றுவதால், நம் தாயுமானாரும் பிரம்மனை வினவு முகத்தால் சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று நிலை நாட்டுகிறார்.

3. இதனால், இறைவனைக் கண்டு இறைஞ்சுதற்கு எத்தனை நாளாகுமோ என ஏங்குகிறார்.

(இ-ள்) நெஞ்சே! எந்தையை, சிதம்பரத்தில் நடனமாடும் நடராஜப் பெருமானை, என் உயிருக்குள் உயிராகி நின்ற தூயோனை, வெட்ட வெளியாய் நிற்பவனை, சுக சொரூபமாகிய நித்தியமானவனை, எக்காலத்தும் நிராதாரமாயிருக்கும் மலரகிதனைக் கண்டு வணங்குவதற்கு எத்தனை காலமாகுமோ! (எ-று.)

4. இதனால், என்மீது மனமிரங்கக் கூடாதா என வேண்டுகிறார்.

(இ-ள்.) நான் பார்க்கும் உருவமெல்லாம் உன் சொரூபமே யென்று கருதி முன்பும் இப்பொழுதும் கைகூப்பித் தொழுது நின்ற அடியேனைக் கண்டு கருணை பாலிக்க வேண்டாம்! (எ-று.)




# இந்து மதத்துக்கு விமோசனம்!





**ம**ன்னர்கள் பிறந்த தினங்களை முன்னிட்டு, பிரஜைகளுக்குச் சன்மானம் அளிக்கப்படுவது எங்கும் நடக்கும் சம்பிரதாயம். திருவிதாங்கூர் மஹாராஜா தமது இருபத்தைந்தாவது பிறந்த நாள் கொண்டாட்டத்தை யொட்டி பிரஜைகளுக்கு ஒரு சன்மானம் அளித்திருக்கிறார்.

அச்சன்மானம் என்ன? பொன்னா? பொருளா? பட்டமா? பதவியா? இவைகளை யெல்லாம்விட மேலான—விலைமதிக்க வொண்ணாத—பிரஜா வுரிமையே யாகும். அவ்விதப் பிரஜா வுரிமையிலும் பலவகையுண்டு. லௌகிக முறையிலும், பாரமார்த்திக முறையிலும் மக்களுக்கு இயற்கையாகப் பல உரிமைக ளிருக்கின்றன. அவ்வித உரிமைகள் இடையே ஏற்பட்ட சில மூடப்பழக்க வழக்கங்களால் பாதிக்கப்பட்டன. அவ்விதம் பாதிக்கப்பட்ட சில உரிமைகளில் ஆலயப்பிரவேச உரிமையும் ஒன்று. இவ்வுரிமை நம் நாட்டில் பொதுவாக, தாழ்த்தப்பட்ட வகுப்பு சகோதரர்களுக்கு எக்காரணத்தாலோ மறுக்கப் பட்டிருக்கிறது. அவ்வாண்ம வேட்கை உரிமையைத்தான் இப்போது திருவிதாங்கூர் மகாராஜா தமது இந்து பிரஜைகளுக்கு வேற்றுமையின்றி யளித்திருக்கிறார். இது இந்து மக்களுக்கு முக்கியமாக, தாழ்த்தப்பட்ட இந்து சகோதரர்களுக்கு ஒரு பெரிய சன்மான மல்லவா!

திருவிதாங்கூர் மகாராஜா இந்த ஆலயப்பிரவேச உரிமை சம்பந்தமாக, பிரகடனமொன்று வெளியிட்டிருக்கிறார். அது வருமாறு:—

"நமது மதம் இறைவன் திருவருள் வழிப்பட்டது. சமரச உணர்ச்சி கொண்டது. மத வழக்கங்கள் காலத்திற் கேற்றாற்போல் மாறி வந்திருக்கின்றன. ஹிந்து மதத்தின் பேருண்மைகளை நாம் நன்கு உணர்ந்திருக்கிறோம். ஆகையால், பிறப்பு அல்லது சாதி காரணமாக, எந்த ஹிந்துப் பிரஜைக்கும் மத வழிபாட்டில் தடையிருக்கக் கூடாதென்

பது நம்முடைய அபிப்பிராயம். உற்சவங்கள், பூஜைகள் முதலியவை சம்பந்தமாக அவ்வப்போது நாம் செய்யும் விதிகளுக்கு உட்பட்டு சமஸ்தான நிர்வாகத்தின் கீழுள்ள ஹிந்து ஆலயங்களில் புகுந்து வழிபட எந்த ஹிந்துவுக்கும் ஜாதி, பிறப்பு காரணமாகத் தடையிருத்தலாகாதென்று நாம் உத்தரவிடுகிறோம்."

உலகத்திலேயே இந்தியாவில் தான் சாதி, சமய வேற்றுமைகளும், மூடபழக்க வழக்கங்களும் மிகவும் மலிந்திருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. அதிலும் தென்னிந்தியாவில் இவைகளின் ஆதிக்கம் அதிகம். இதிலும் கேரள நாடே இவைகளுக்குத் தாயகமெனக் கூறின் மிகையாகாது. ஏனெனில் அங்குதான் வைதிகத்தின் முழு சொரூபம் காணப்படுகின்றது. தமிழ் நாட்டின் மற்ற பாகங்களில் தீண்டாமை மட்டுந்தான் அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. கேரளத்திலோ தீண்டாமையோடு, பாராமையும் (அதாவது தாழ்த்தப்பட்ட மக்களைக் கண்ணால் பார்த்தலுங் கூடாது) கடுமையாகக் கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது. ஆகையினால்தான், கேரளத்தின் முக்கிய பகுதியான திருவிதாங்கூரில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களென்ற காரணத்தால், ஆலயப்பிரவேச உரிமை அளிக்கப் பட்டிருப்பதைக் கண்டு பெரும்பாலோர் ஆச்சரியமும், சந்தோஷமும், சிலர் சந்தேகமுங் கொண்டு அபிப்பிராயங் கூறியிருக்கின்றனர். பொதுவாக, இந்து மதத்தைச் சேர்ந்த அனைவரும் ஆலயங்களுக்குள் பிரவேசிக்கலாம் என்று மகாராஜா உத்தரவிட்டிருந்தாலும், பின்னர், ஆலய நிர்வாகிகள் விதிகளை விதித்து ஆண்டவனை வழிபடும் விஷயத்தில் இடையூறு செய்து வேறொருவகையில் அவ்வுரிமையைப் பறிக்க முயலலாம் அல்லவா! ஏனென்றால், இதுவரை திருவிதாங்கூரில் சமஸ்தான ஆலயங்களில் புகும் விஷயத்தில் ஆலயப்பிரவேச உரிமையைத் தாராளமாகப் பெற்றுள்ள ஜாதி ஹிந்துக்களுக்குக் கூட சில விதிகள் இடையூறாக இருந்தன. பூஜை செய்யும் அருச்சகரைத் தவிர வேறு யாரும் கருப்பக் கிருகத்திற்குள் அநுமதிக்கப் படுவதில்லை. சில வகுப்பார் நமஸ்கார மண்டபத்திற்குள் புகுவதற்கும் அநுமதிக்கப்படுவதில்லை. ஆகவே, இவ்வித விதிகள் ஏதேனும் விதிக்கப்பட்டு ஆண்டவன் தரிசனத்தைத் தடை செய்யலாம் எனச் சிலர் சந்தேகிப்பதற்கு நியாயமும், இடமுமிருக்கிறது. ஆனால் இப் பிரகடனத்துக்குப் பிறகு வெளியான விதிகளைக் கவனித்ததில் அவ்வித சந்தேகத்துக்குச் சிறிதும் இடமில்லையென நன்கு விளங்குகிறது. "கோயில்களில் சரியான நிலைமையைப் பாது காப்பதற்கும், அவற்றின் சடங்குகள், சம்பிரதாயங்கள் இவற்றைப் பாமரிப்பதற்கும் நாம் ஏற்படுத்தும் விதிகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டு, பிறப்பாலோ அன்றி மதத்தாலோ ஹிந்துவாக உள்ள எவருக்கும் நமது ஆதிக்கத்திற்கும் நமது கவர்ன்மெண்டின் ஆதிக்கத்திற்கும் உட்பட்ட கோயில்களில் நுழைவதற்கும், தொழுவதற்கும் இனி நிர்ப்பந்த

மெதுவு மிருக்கக்கூடாதென நாம் ஆக்ஞாபிக்கிறோம்' என மகாராஜா ஸ்ரீ முகத்தில் குறிப்பிட்டிருக்கிற நோக்கங்களை நிறைவேற்றி வைப்பதற்காகவே, அவ்விதிகளும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இவ்விருபத்தொரு விதிகளில் மிக முக்கியமானவைகளை வாசகர்கள் அறிந்து கொள்வதற்காகக் கீழே தருகிறோம்.

1. கோவில்களில் பூஜை, நைவேத்தியம், வழிபாடுகள், நித்ய நிதானம், மாஸ விசேஷம், அட்ட விசேஷம், உத்ஸவம் முதலிய சாமான்ய விசேஷ காரியங்களும், கிரியைகளும் முன்போலவே நடைபெற்று வரவேண்டியது. ஸ்ரீ முகத்தை யநுசரித்து ஜனங்கள் வழிபாட்டிற்கு வருங்காலம், இடவரையறை, வருபவர்கள் தொகை முதலியவற்றை, தேவஸ்தம் பிரதம உத்தியோகஸ்தர் நிர்ணயிக்க அதிகாரமுண்டு.

2. ஆலயப் பிரவேசம் அநுமதிக்கப் பட்டதைக் கொண்டே கோவில் மடைப்பள்ளி முதலிய தற்கால நிபந்தனைகளுக் குட்பட்ட இடங்களுக்குள் எல்லோருஞ் செல்வதற்கில்லை.

3. இந்துக்க ளல்லாதவர்கள், ஜனன மரணங் காரணமாக, தீட்டுள்ளவர்கள், வழக்கத்தினாலும் ஆசாரத்தினாலும் குறிப்பிட்ட காலத்தில் போகக்கூடா தென்றுள்ள பெண்கள், குடித்தவர்கள் அல்லது ஒழுங்கீனமாக நடப்பவர்கள், தொத்து வியாதிக் குட்பட்டவர்கள், தகுந்த கட்டுப்பாடுட னில்லாமல் பிரதம உத்தியோகஸ்தர் முன் அநுமதி பெறுமல் வரும் சித்த சுவாதீன மற்றவர்கள் கோவில் மதிலுக்குள்ளோ, மதிலில்லாவிடில் கோவிலுக்குள்ளோ செல்லக்கூடாது.

4. சுத்தமான துணிகளை ஆசாரத்தை யநுசரித்த முறையில் அணியாமலும், செருப்பு முதலியன போட்டுக் கொண்டும் உள்ளே வரக்கூடாது.

5. கோவிலுக்குள் துப்புவதோ, வெற்றிலை, புகையிலை போட்டுக் கொள்வதோ, சுருட்டு முதலியன குடிப்பதோ கூடாது. சாமான்களையும், மீன், முட்டை, மாமிசம், மதுலாகிரி வஸ்துகள் முதலியவைகளையும் எடுத்துப் போகக்கூடாது.

6. பலி கல்பூரம், வலியம்பலம், மளாம்பலம், இளமதிள் முதலியவற்றிற்குள் யாரும் சட்டை முதலியன தரித்து செல்லக்கூடாது. பெண்கள்மட்டும் வழக்கமான ஆடையணியலாம்.

7. கோவில் குளத்தில் ஹிந்துக்கள் தவிர மற்றவர்கள் ஸ்நானஞ் செய்யக்கூடாது.

8. கோயிலில் உரக்கப் பேசியும், வேறுவித ஆர்ப்பாட்டம் செய்தும் வழிபாட்டு முறைக்கு இடையூறு உண்டு பண்ணக்கூடாது.

9. பூஜை அல்லது பூஜை சம்பந்தமான அலுவல்கள் தவிர, மற்றக் காரியங்களுக்குக் கோயிலை யுபயோகிப்பது சட்டவிரோதமாகும்.

10. கோயில் புனிதத்தன்மையைக் கெடுக்கக்கூடியதாக யாரும் எக்காரியமும் செய்யக்கூடாது.

இவ்விதிக ளெல்லாம் தமிழ்நாட்டிலுள்ள மற்ற கோயில்களில் அநேகமாக அமுலில் இருந்து வருவதேயாகும். ஆகையால் அவ் விதிகளைப்பற்றிக் குற்றமோ, குறையோ கூறுவதற்கில்லை. கோயில் பிரதம நிர்வாகிகளுக்கு விசேஷ அதிகாரம் அளிக்கப்பட்டிருப்ப தால் அவர்கள் பழைய சம்பிரதாயத்தையும், சாதி வேற்றுமையையும் மனத்துட்கொண்டு, தங்கள் அதிகாரத்தைத் துஷ்பிரயோகஞ் செய் யாதவரை யாதொரு சங்கடமுமில்லை. அவர்கள் நடுநிலைமையாகவும், நியாயமாகவும் நடந்து கொள்வார்களென்றே நம்புவோமாக. மற் றப்படி இவ்விதிகள் ஆண்டவன் சந்நிதானமாகிய ஆலயத்தின் பரி சுத்தத்தைப் பாதுகாப்பதற்கு அத்தியாவசியமானவைகளே யாகும்.

சென்ற இருபதாண்டுகளாகத் திருவிதாங்கூரில் தீண்டாமையை எதிர்த்துப் பிரசாரம் நடைபெற்று வந்தது. 1919-வது ஆண்டில் ஸ்ரீ மூலம் சட்டசபையில் ஸ்ரீமான் டி. கே. மாதவன் தாழ்த்தப்பட்ட மக் களுக்கும் ஆலயப்பிரவேச உரிமை யளிக்கவேண்டுமென விண்ணப்ப மொன்று சமர்ப்பித்தார். 1923-ம் வருஷம் இவ்வியக்கம் பலமடைந் தது. 1924-ம் ஆண்டில் பாதைகளில் நடமாட தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இருக்கும் தடையை எதிர்த்து சத்தியாக்கிரகம் நடைபெற் றது பின்னர் 1932-ம் ஆண்டில் குருவாயூரிலும் சத்தியாக்கிரக இயக்கம் நடந்தது. அவ்வருஷம் நவம்பர்மீ 8-ந்தேதி யன்று ஆல யப் பிரவேச விசாரணைக்கமிட்டி யொன்றைச் சர்க்கார் நியமித்தனர். தீண்டாமையைச் சட்டமூலம் ஒழித்து ஆலயப் பிரவேச உரிமை யளிக்க வேண்டுமென்று கமிட்டியார் சிபார்சு செய்தனர். ஜாதி ஹிந் துக்களில் பெரும்பாலோரும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆலயப் பிர வேச உரிமை யளிப்பதை ஆதரித்தனர்.

இவ்வளவு காலமாக, மகாத்மாகாந்தி போன்ற தலைவர்களாலும், சீர்திருத்த நோக்குடைய பெரியோர்களாலும் விடாமுயற்சியோடு செய்து வந்த தொண்டு இன்று வெற்றி பெற்றுவிட்டது. அசோக அரசர் காலத்திற்குப் பிறகும், ஸ்ரீமத் ராமாநுஜர் காலத்திற்குப் பிற கும் திருவிதாங்கூர் மஹாராஜா அளித்திருக்கும் ஆலயப் பிரவேச உரி மையே நம் நாட்டில் பெரிய சீர்திருத்தமாகும். இந்தியாவின் சரித் திரத்திலும், இந்துமதத்தின் சரித்திரத்திலும் இது பொன்னெழுத் தால் பொறிக்கத் தக்கதாகும். இவ்விதம், ஆலயப் பிரவேச உரிமை யளித்த மஹாராஜாவையும், இது விஷயமாக விடாமுயற்சியுடன் பாடு பட்ட திருவிதாங்கூர் ஹரிஜனசேவா சங்கத்தலைவர் ஸ்ரீமான் பரமேஸ்வ ரம் பிள்ளையையும் நாம் வாழ்த்துகிறோம். திருவிதாங்கூரில் ஏற்பட்டிருக் கும் இம் மகத்தான சீர்திருத்தம் இந்து மதத்துக்கு ஒரு வகையில் விமோசனத்தை யளித்திருக்கிறது—உயர்வைக் கொடுத்திருக்கிறது.

எனக் கூறின் மிகையாகாது. திருவிதாங்கூர் மகாராஜா மனமுவந்து தாழ்த்தப்பட்ட சகோதரர்களுக்கு ஆலயப் பிரவேச உரிமையளித்தது போலவே, இந்தியாவிலுள்ள மற்ற சுதேச மன்னர்களும் மேற்படி உரிமையை அளித்து, அதன் வாயிலாக இந்து மதத்துக்குச் சிறப்பையும் தங்களுக்குப் பெருமையையும் உண்டு பண்ணுவார்களென நம்புகிறோம். அவர்கள் அவ்விதஞ் செய்வார்களானால், பிரிட்டிஷ்—இந்திய சர்க்காரும் கட்டாயம் அவ் வுரிமையை வழங்கத் தயங்கமாட்டார்களென்பது திண்ணம். இந்தியாவுக்கும், இந்து மதத்துக்கும் இலேத்த புகழைத் தரும் இப்பெரிய சீர்திருத்தம் நம் நாட்டில் விரைவில் ஏற்படுவதற்கு இறைவன் கருணை பாலிப்பாராக.

ஓம்: தத்ஸத்.

---

# தமிழ்ப்பெரியார்கள் மறைவு

இம் மாதத்தில் தேசபக்தர். திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களும், ஸ்ரீஜத். கோ. வடிவேல் செட்டியாரவர்களும் ஒருவர் பின்னொருவராய இம் மண்ணுலகவாழ்வை நீத்ததை யறிந்த தமிழ்மக்கள் யாவரும் மிகவும் வருந்துவார்களென்பது திண்ணம். இவ்விரு பெரியார்களும் ஒவ்வொரு வகையில் சிறந்தவர்களாவர். ஆனால், இருவரும் சிறந்த தமிழறிஞர்கள். திரு. பிள்ளையவர்கள் தமிழ்நாட்டில் முதன் முதலாகத் தேசியவுணர்ச்சியை ஊட்டியவர். சுதேச இயக்கத்தை ஏற்படுத்தித் தீவிரமாக வேலை செய்து அதன் வாயிலாகச் சிறை சென்றவர். ஆங்கிலத்தில் சிறந்த நூல்களில் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்து தந்திருக்கிறார்.

ஸ்ரீஜத் செட்டியாரவர்களோ கலைக்களஞ்சியம். இலக்கிய இலக்கண தருக்க வேதாந்த போதகாசிரியர். அத்துடன் சிறந்த உரையாசிரியருமாவர். தமிழ்மொழிக்கும் வேதாந்தத்துக்கும் அவர் செய்த சேவை அளப்பரிது. அவருக்கு ஆயிரக் கணக்கான மாணவர்களிருக்கின்றனர். சமயம் நேர்ந்தபோதெலலாம் அவர் தமது பொருள் பொதிந்த கட்டுரைகளால் நம் "ஆனந்தனை" அலங்கரித்து வந்திருக்கிறார். சமீபத்தில் அவர் நம் 'ஆனந்த'னுக்குத் தொடர்ச்சியாக விஷயதானஞ் செய்ய உடன்பட்டு, சென்ற புரட்டாசி இதழில் "வேதாந்த சாஸ்திரார்த்த வாக்கியாமிர்தம் 400" என்ற தலைப்போடு கட்டுரை யெழுதினார். அதற்குப் பிறகு, அவர் எதிர்பாரா வகையில் நோய் வாய்ப்பட்டு, இறைவனடியை அடைந்தார்.

இத்தகைய பேரறிஞர்கள் பூதவுடம்பை நீத்துப் புகழுடம்பு பெற்றது நமக்குப் பெரு நஷ்டமாகும். அவர்களது ஸ்தானங்களை அவ்வளவு எளிதில் பூர்த்தி செய்ய முடியாது. அவர்களது ஆன்மா சாந்தி யடைக.

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(270-வது பக்கத் தொடர்ச்சி.)

## அதிகாரம்—5.

### சில முக்கிய கருத்துக்கள்.

பொருள் நூலில் வழங்கப்பெறும் கருத்துகள் யாவும் ஜன சமூக வாழ்க்கையினின்றும் எழுந்தனவாகும். ஆல்Fரெட் மார்ஷல் எனும் பேரறிவாளர் சொல்லியவாறு பொருள் நூல் பொருளைப் பற்றியும் மனிதனைப்பற்றியும் கூறுகிறது. செல்வ வளர்ச்சியில் அது மனிதனுடைய செய்கைகளையும் எண்ணங்களையும் முக்கியமாகக் கொண்டுளது. நாம் வழங்கும் வார்த்தைகளில் சில அதில் அடிக்கடி உபயோகமாகின்றன. செல்வம் (Wealth), மதிப்பு (Value), சரகுகள் (Goods), மூலதனம் (Capital), வருமானம் (Income) முதலான வார்த்தைகள் ஒரு சில.

இந்த வார்த்தைகளின் கருத்து சந்தர்ப்பங்களை ஒட்டியே இருத்தலால், பொருளாதார சாஸ்திரத்தில் இவை தெளிவாகவும் சுலபமாகவும் தெரிந்து கொள்ளக்கூடிய விதமாய் வேறு அர்த்தம் தப்பிதமாக எழாதவகையில் கையாளப்படவேண்டும். எங்கு வேறு கருத்து கொடுக்கவேண்டுமோ அங்கு சரியாக விளங்குமாறு சொல்லவேண்டும். மேல் சொன்ன வார்த்தை பல ஆங்கில பாஷையில் சந்தர்ப்பத்தை யநுசரித்து கருத்து கொடுக்கின்றன. உதாரணமாக மூலதனம் என்று பொருள்படும் ஆங்கில வார்த்தை 'Capital' என்பதை எடுத்துக் கொள்ளுவோம். Capital punishment என்று சொல்லுகையில் அந்த வார்த்தை வேறு அருத்தத்தைக் கொடுக்கும். மரண தண்டனை என்று பொருள்படுகிறது. The Capital of a province என்பதில் அந்த வார்த்தை தலைநகர் என்பதை வெளிப்படுத்துகிறது. தமிழ் பாஷையில் இத்தகைய கஷ்டம் அதிகமாக இல்லையென்பது எனது அபிப்பிராயம். ஆல்Fரெட் மார்ஷல் பொருள் நூலில் வழங்கும் சொற்களைப்பற்றிப் பின் வருமாறு சொல்லுகிறார். "Economists must take as the standard use of these words (like Capital, Income etc.), that which seems most in harmony with every-day usage in the market-place; and they must add a little special interpretation wherever it is necessary."

செல்வத்தை உண்டாக்க மூலதனம் அவசியம். மூலதனம் தனிப்பட்ட முறையிலும் (Individual Capital) சமூகத்தைச் சார்ந்த வகையிலும்

Social Capital) எத்தகையது என்பதை செல்வவிருத்தி சம்பந்தப்பட்ட முறையில் தெரிந்து கொள்ளவேண்டும்.

தற்கால ஜன சமூகங்களில் செல்வமானது (உதாரணமாக; விவசாய சாமான்கள், சுரங்கங்களில் இருந்தும் எடுக்கப்படும் சாமான்கள், கைத் தொழில் இயந்திர சாமான்கள் ) உண்டாக்கப்பட்டு விலைக்கும் மதிப் பிற்கும் மாற்றிக் கொள்ளப்படுகிறது: அல்லது விற்கப்படுகிறது. ஆதலின் விலை (Priceயும் மதிப்பும் (Value) என்ன என்பதையும் சரிவர அறிந்து கொள்ள வேண்டும்.

தேசிய வருமானம் (National Income) நான்காக பிரிக்கப்பட்டுள்ளது. கூலி (Wages), வட்டி (Interest,) லாபம் (Profit,) குத்தகை (Rent) என்பன.

## சரக்குகள் (*Goods*)

எதை நாம் விரும்புகிறோமோ, எது மனிதனுடைய தேவையைப் பூர்த்தி செய்விக்கிறதோ அதைப் பொருள் நூலில் சரக்கு அல்லது சாமான் என்று உரைக்கலாம். காற்று, ஜலம், ரொட்டி, சட்டை, தொப்பி, சிகரெட், தந்தையின் அன்பு, ஸ்நேகிதர்கள்மீது அன்பு — இது ஒவ்வொன்றும் மனிதனுக்கு உபயோகம் கொடுக்கிறது. மேலும் இது அவனுடைய தேவையைப் பூர்த்தி செய்விக்கிறது. ஆதலின் மேற் கூறியவற்றைச் சரக்குகள் என்று சொல்லலாம்.

சரக்குகள் பல வகையாய் பிரிக்கப்பட் டிருக்கின்றன.

Material goods என்று சொல்லப்படுவது சாமான்கள், மற்றும் காற்று, நீர், விவசாயப் பொருள்கள், கைத்தொழில் சாமான்கள், ஆலைகள், சுரங்கச் சாமான்கள், யந்திரங்கள் முதலானவை 'மெடீரியல் கூட்ஸ்' எனப்படும். மற்றும் சிலவற்றால் பின்னால் நன்மை பயக்கும் பொருள்களையும் குறிப்பிடும். (உ-ம்) கூட்டுத் தொழில் கம்பெனிகளின் "ஷேர்கள்" (Shares), காபிரைட் (Copyright), அடமானங்கள் (Mortgages) இவற்றினால் ஏற்படும் நன்மைகளைக் குறிக்கும்.

ஒரு மனிதனுக்கு அவனைப் பொருத்த மட்டிலுமுள்ள சரக்குகளுக்கு ஆங்கிலத்தில் (Personal goods) என்பார்கள். அதாவது மனிதனுடைய மனத்தில் நிகழும் குணநிசயங்களும் சந்தோஷமும் (உ-ம்) அவனுடைய வேலைத்திறனை, தொழில் திறமை நல்ல இலக்கியத்தையும், மற்றும் சங்கீதம் அதனால் ஏற்படும் சந்தோஷம் முதலியவற்றை எடுத்துக் கொள்ளலாம். அவனை வெளியில் பொருத்த மட்டும் பிறரோடு சந்தோஷமாய் இருந்து தொழிலை முதன்மைக்குக் கொண்டுவருதல் உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

சரக்குகள் விலைக்கு போகக் கூடியதாயும் மாற்றிக் கொள்ளக்கூடியதாயுமிருக்கும். அத்தகைய சரக்குகளுக்கு (Transferable goods) என்பார்கள். (உ-ம்) விவசாயப் பொருள்கள், கம்பெனியின் "ஷேர்கள்"

விற்க முடியாததும் மாற்றிக் கொள்ள முடியாத சரக்குகளை ஆங்கிலத்தில் (Non-transferable goods) என்பார்கள். (உ-ம்) ஒரு மனிதனுடைய குணாதிசயங்கள், சிநேகோஷ்ணம், சூரிய வெளிச்சம்.

மேற்கூறியவற்றிலிருந்து சரக்குகள் மனிதனுடைய முயற்சியாலும், முயற்சியின்மையாலும் கிடைக்கும் என்பது விளங்குகின்றது. முயற்சி இல்லாமல் கிடைக்கக்கூடிய சரக்குகளுக்கு "ப்ரீ கூட்ஸ்" (Free Goods) என்று சொல்வார்கள். அவை மனிதனுடைய உழைப்பினால் ஆனவையல்ல. இனாமாக கிடைப்பதாகும். (உ-ம்.) ஒரு புதிய நாட்டில் கிடைக்குமிடம் இனாம் சரக்கு என்று சொல்லலாம். ஆனால் ஒரு பழைய நாட்டிலுள்ள நிலம் இனாம் சரக்கு ஆகாது.

மனித முயற்சியினால் ஆக்கப்பெறும் சாமான்களுக்கு ஆங்கிலத்தில் Appropriated Goods என்று சொல்வார்கள். (உ-ம்.) விவசாயப் பொருள்கள், கைத்தொழில் சாமான்கள் முதலியவை.

உபயோகம் செய்து கொள்ளுதல், (consumption), உண்டாக்குதல் (production) ஆகிய இவற்றினின்றும் யோசனை செய்தால் சரக்குகள் உபயோகச் சரக்குகள் (consumption goods) என்றும், உண்டாக்குதல் சரக்குகள் (production goods) என்றும் பிரிக்கப்படும். (உ-ம்.) நாம் அணிந்து கொள்ளும் வஸ்திரங்கள், ஆபரணங்கள் முதலியவற்றிலிருந்து நாம் சந்தோஷம் எய்துகின்றோம். இத்தகைய செல்வத்தை உபயோகமாகும் சரக்குகள் என்று சொல்வார்கள்.

உண்டாக்குதல் சரக்குகள் என்பனவற்றிற்கு (உ-ம்.) நிலம், ஒரு தொழில் சாலையிலிருக்கும் இயந்திரங்கள் முதலானவற்றைச் சொல்லலாம். இவற்றினால் நமக்கு சந்தோஷம் கொடுக்கும் சரக்குகளை உண்டாக்கிக் கொள்ளலாம்.

## செல்வம் (Wealth)

பழைய பொருளாதார நூலாசிரியர்கள் பொருள் நூலை செல்வ விருத்தி சாஸ்திரமென்று சொன்னார்கள். ஆனால் தற்காலத்திய பொருளாதாரக் கொள்கை மனிதனுடைய செல்வ விருத்தியையும் அவனுடைய செய்கைகளையும் சொல்லுவதாக ஐரோப்பிய பெரியோர்கள் உரைக்கின்றார்கள். அப்படியானால் செல்வம் என்பது என்ன ?

செல்வம் என்னும் வார்த்தை பல வகையில் அர்த்தம் கொடுக்கும். செல்வம் என்றால் சரக்குகள் அல்லது சாமான்கள் என்று பொருள் படும். ஒரு சரக்கு உபயோகம் மனிதனுடைய தேவையை நீக்கக் கூடியதாகவும் இருந்தால் அதை செல்வம் என்று கருத்து செய்துகொள்ளலாம், அதனால் மேற்கூறிய இரண்டும் இருந்தால் எல்லாம் செல்வம் ஆகும்.

டாசிக் (Professor Tawssig) எனும் பொருள் நூல் ஆசிரியர், "மனிதனுடைய தேவைகளைப் பூர்த்தி செய்விக்கக்கூடியதும் மனிதனுடைய முயற்சியினால் ஆனதும் இயற்கையினால் சிருஷ்டிக்கப் பட்டதும் குறைந்த அளவில் கிடைப்பதும் ஆன சாமான்களையே செல்வம்" என்று சொல்லு

# மார்கழி மாதத்தின் மகிமை

(வை. ச. இராமலிங்க முதலியார்.)

நம்மிந்திய நாட்டிலே, "வடவேங்கடந் தென்குமரியா யிடைத் தமிழ்கூறும் நல்லுலகம்" என்றும், "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும், தமிழ் வரம்பறுத்த தண்புனல் நாடு" என்றும் புலவர் பெருமக்களால் சிறப்பித்துக் கூறும் பெரும்புகழினை வாய்ந்த நந்தமிழகத்தின், மாதங்க ளெல்லாவற்றிலும் மார்கழி மாதமே மிகச் சிறந்ததென்பது நமது சைவ, வைணவ, வைதிக சமயத்தார்களது கொள்கையாம். இம்மாதத்தைத் தனுர் மாதமென்று கூறுவது. மிருகசீர்ஷ நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடுவதால் இம்மாதம் "மார்கசீர்ஷ" அல்லது மார்கழி என்று கூறப்படுகிறது. இம் மாதத்தைத் தனுர்மாத மென்று கூறுவது வடநூல் வழக்கு. "உத்தம வானோர் தம்மு ளுத்தம னாகுமீசன்" என்றபடி தேவர்களிற் றலை சிறந்தவன் சிவபெருமானே யாதல்போல, மாதங்களில் மார்கழி மாதமே மிக்க சிறப்புடைத்தென்பது நம்மனோர் மனக்கிடக்கை. இதுபற்றியே கீதாசாரியராகிய கிருஷ்ண பரமாத்மாவும், "மாதங்களுள்ளே யான் மார்கழி மாதமாக இருக்கிறேன்" எனக் கூறியுள்ளார். வாரங்களிற் சிறந்தது சோமவாரமென்று கூறப்படுகிறது சில அறிவிலாப்

---

கிறார். உபயோகமும் குறைந்த அளவில் அவை இருத்தலும் செல்வத்திற்கு முக்கியமானவையாகும்.

மற்றொரு வகையில் செல்வம் என்பது பின் வருமாறு கொள்ளப்படுகிறது. மாந்தர்களுக்குச் சொந்தமானது. உபயோகமும் தன்னுடையது என்று சொல்லிக் கொள்ளும் உரிமையும் (ownership) ஈண்டு கவனிக்கத்தக்கது. உபயோகம் இல்லாத வஸ்துக்களை யாரும் சொந்தமாகக் கருத மாட்டார்கள். மற்றும் பல்வேறு வகையில் செல்வம் என்பதற்கு அர்த்தம் இருக்கிறது. நாம் அவற்றைப்பற்றி அதிகமாக உரைக்க வேண்டுவதில்லை.

செல்வத்திற்கும் தேவைகளுக்கும் உள்ள சம்பந்தத்தை மறந்துவிடலாகாது. ஒரு நாகரீகமுள்ள மனிதனுக்கு ஒரு புஸ்தகம் அல்லது வேறு எந்த சாமானோ செல்வம் என்று இருக்கும். அவனுக்குப் புஸ்தகத்தினால் ஒரு தேவை நீங்கி, சந்தோஷம் ஏற்படுகிறது. அதே புஸ்தகம் ஒரு காட்டுமிராண்டிக்குச் செல்வமாகத் தோன்றாது. கட்டிடம் கட்டும் ஒரு ஆளுக்கு மணல் செல்வமாகும். ஆனால் ஒரு பாலைவனத்தில் உள்ள மணல் செல்வம் ஆகாது.

ஆதலின் செல்வம் எனப்படுவது உபயோகம், குறைந்து இருத்தல் முதலான குணங்களைக் கொண்டதாகும். (தொடரும்.)

பேதை மக்களால், இம்மாதம் பீடைமாதமெனவும், பீடை நாட்களெனவும் சொல்லப்படுகிறது. பீடைகழியும் நாள் அல்லது பீடைகழியும் மாதம் என்பதை, மெய்யினைப் பொய்யெனு மிவ்வுலகம் பீடை நாளெனவும், பீடை மாதமெனவும் இழித்துக் கூறுகின்றது. உண்மையில் அம்மாதமே மிக்க புனிதமாகவும், சிரேஷ்டமாகவும் பண்டைய நூல்களில் ஆன்றோர்களால் கூறப்படுகின்றது. இராவண சம்மாரம் மாசிமாதத்திலும், திரிபுரசம்மாரம் ஆடி மாதத்திலும், இரணிய சம்மாரம் புரட்டாசி மாததிலும், பாரதயுத்தம் மார்கழி மாதத்திலும் நடைபெற்றதாக சுருதிகள் கூறுவதால், இம்மாதங்கள் நூதனமாகச் செய்யும் சுப காரியங்களுக்கு விலக்கென்று நமது முன்னோர்கள் வரையறுத் திருக்கின்றனர். அதைக் கொண்டுதான், இவர்கள் மார்கழி மாதத்தைப் பீடை நாளெனக் கூறுகின்றனர் போலும். இதைத்தவிர இவர்களுக்கு வேறே யாதொரு ஆதாரமும் கிடையாது. இது மிகவும் அறியாமையின் பாற் பட்டதாகும்.

ஒரு சிலர் கருதுகிறபடி கூறுகிறபடி இம்மார்கழி மாதமானது பீடை நாளாயின், இம்மாதம் பிறந்தது முதல் முடிவு வரையில் தினந்தோறும் பிராதக்காலத்தில் சகல இந்து தேவாலயங்களிலும், தனுர்மாத பூஜையென்று கடவுளுக்கு அபிஷேக ஆராதன அன்ன நைவேத்திய அர்ச்சனையாதிய சிறப்புகள் மிக்க குதூகலத்துடன் என் நடைபெறுகின்றன? அதிகாலையில் நமது ஆலயங்களில் மேளவாத்தியம், உடல், நகரி, பேரி, சின்னம், டமாரம் முதலிய பல வாத்ய கோஷங்கள் முழங்கப்படுவதேன்? திருப்பள்ளி யெழுச்சி, திருவெம்பாவை யோதல் முதலிய கிரியைகள் தெய்வ சந்நிதானங்களில் என் செய்விக்கப் படுகின்றன? இந்துக்கள் வீடுகள்தோறும் விடியற்காலையில், அறிவுசான்ற பெரியோர்களாலும் இளஞ் சிறூர்களாலும் தேவார திருவாசக, பிரபந்தமாதிய தோத்திரப்பாக்க ளோதப்படுவதேன்? கிராமங்களிலும், நகரங்களிலும் வழக்கமாக பண்டாரங்களும், (ஆண்டிகளும்) தாசர்களும் ஜெயகண்டி, சங்கம், தப்பு சின்னம் முதலிய சுபவாத்திய கீதஞ்செய்து வீதிவலம் வந்து ஊர் பாடுவதேன்? மாதர்கள் தத்தமில்லங்கள் தோறும், கோமயத்தால் மெழுகி திருவலகிட்டு சுத்தம்செய்து விசித்திரமாகப் பலவித கோலந்தீட்டி சாணி உருண்டைகளின்மீது பூச்சூடுவதேன்? அந்தணர்கள் வேதாத்யயனஞ் செய்து மறையொலி முழக்குவதேன்? சித்தத்தைத் தேவன்பாற் செலுத்திய சைவ, வைணவ பக்தகோஷ்டிகள் பிராதகாலத்தில் துயில் நீத்துப் புதுப்புனலாடி, நித்ய கரும ஜெபதப அனுஷ்டானாதிகள் முடித்து கூட்டம் கூட்டமாகப் பஜனை பாடிக்கொண்டு வீதிவலம் வருவதேன்? இத்தகைய சத்கருமங்களெல்லாம் இம்மாதத்தின் புனிதத் தன்மையை விளக்குகின்றதல்லவா? இவ்விதமிருக்க, இம்மாதத்தைப் பீடைநாளென்பது யாங்ஙனம்? இது அறியாமையின் பொய்க்கூற்றேயாம்.

தவிர, இம்மார்கழி மாதமானது மிக்க சிரேஷ்டமென்பதற்கு அனேக காரணங்க ளிருக்கின்றன. நமக்கு முப்பது நாழிகை கொண்ட பகலும், முப்பது நாழிகை கொண்ட இரவுஞ் சேர்ந்து ஒரு நாளாகிறது. இரவின் ஆறும் பாகமாகிய கடைசி ஐந்து நாழிகை வைகறை, எற்பாடு அல்லது உஷத் காலம் எனப் பெயர் பெறும். இக்காலமே பகல் முழுதும் விஷயங்களிற் புகுந்து விவகரித்து அலுப்புற்ற கருவிகரணங்கள் இளைப்பாறிப் புதுப்பலம் பெற்றிருத்தலின், பிரம்ம த்யானத்திற்குரிய காலமாக பெரியோர்களால்

சொல்லப்பட்டு வருகிறது. ஆதலின், வைகறை ஒரு நாளின் சிறந்த பாகமாகும். நாம் ஒரு வருஷமென்று சொல்லும் பன்னிரண்டு மாதங்களடங்கிய காலமானது, தேவர்களுக்கு ஒரு நாளாகிறது. உத்தராயணமாகிய தை முதல் ஆனி வரையில், தேவர்களுக்குப் பகலும், தக்ஷிணாயனமாகிய ஆடி முதல் மார்கழி வரையில் இரவுமாகின்றது. ஆகவே மேற்கூறிய மார்கழி மாதமானது தேவர்களுக்கு வைகறையாம். அதுவே அவர்களுக்குத் துயிலெழுந்து கடவுளை வழிபடுதற்குரிய காலம். ஆதலின், அம்மாதத்தை நாம் சிறந்ததெனக் கொண்டு, தினந்தோறும் வைகறையிற் றுயிலெழுந்து, மார்கழிப் புது நீராடி, வீடு தெரு முதலியவற்றைச் சுத்தம்செய்து கோலந் தீட்டிப் பூச்சூடி யலங்கரித்து, கடவுட் பூஜை தேவார திருவாசகாதி பிரபந்த தோத்திரப் பாக்கள் பாராயணம், முதலியவை செய்து, சிறப்புறக் கொண்டாடுகிறோம். மேலும் நம் உததராயணமாகிய தேவரது பகற்காலம் சிருஷ்டி தொடங்கப்பெற்று உலகம் நடைபெறுங் காலமாகவும், தக்ஷிணாயனமாகிய தேவரது இராத்திரிகாலம் சம்மாரத்தின் பின்னுள்ள ஒடுக்க காலமாகவும், கொள்ளப்படுதலின், தக்ஷிணாயனத்தின் கடைசி பாகமாகிய மார்கழி மாதம் சிருஷ்டி ஆரம்ப காலத்தைத் தெரிவிக்கிறது. சர்வ சம்மாரத்தின் பின்னர்ப் பரமசிவம் பழையபடியே பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கத்திருவுளங்கொண்டு, வயிந்த சக்தியைச் சிருஷ்டிக்கத் தொடங்கும் சந்தர்ப்பம், அஃதாவது சம்மார காலத்தில் சத்தியின் சம்பந்தமற்று அமர்ந்து நித்திரை செய்வதுபோன்று செயலற்றுத் தனித்து இருந்த நிலையினின்று புடைபெயர்ந்து பெருமான் ஐந்தொழிற் செய்தற் பொருட்டுச் சத்தியோடு சம்பந்தப்படுங் காலம், தேவர்களின் வைகறையாகிய இம் மார்கழி மாதமேயாகும். இது தேவர்களுக்கு உதயகாலமாய், சிருஷ்டிக்கு ஏதுவாயிருக்குந் தன்மையால் சிறப்புடைத்தென்ப தொருதலை. இக்கிருத்தியத்தை யுணர்த்துவதற்குச் செய்விக்கப்படும் விழாவே, ஆலயங்களில் திருப்பள்ளி யெழுச்சியென வழங்கப் பெறுகின்றது.

மேலும், திருவாதிரைத் திருநாளென்னுஞ் சீரிய விழாவானது, இம் மாதத்தில் நடைபெறுவதும் இம் மதியின் மேன்மைக் கோர் காரணமாகும். தினந்தோறும் நமது ஆலயங்களில் கடவுளுக்கு ஆறுகால பூஜை நடந்து வருவதுபோலவே, தேவர்களுக்கு ஒரு நாளாகிய (நமது) வருஷத்தில், தேவதேவனாகிய சபாபதிக்கும் ஆறு அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. இவ் வபிஷேக தினங்களை

"சித்திரையி லோணமுதற் சீரானி யுத்திரமாம்
சத்ததனு வாதிரையிற் சார்வாகும்—பத்திவளர்
மாசியரி கன்னி மருவுசதுர்த் தசிமன்
றீசரபி டேகதின மாம்"

என்னுஞ் செய்யுளா னறிக. இவ்வாறு அபிஷேகங்களிலும் மிக நனிசிறந்து விளங்குவது, இம்மார்கழித் திருவாதிரை யபிஷேகமே யாகும். ஏனெனில், இச்சீரிய நாளில் பெருமானுக்கு நடக்கும் அபிஷேகாதி கிரியைகள், நடராஜர் செய்தருளும் பஞ்ச கிருத்தியத்தைக் குறிக்கின்றன. அஃதாவது, சபாபதி ஆஸ்தானத்துக்கு வருதல் (புடைபெயர்ச்சி) சிருஷ்டியையும், மண்டபத்

தில் அபிஷேகங் கொண்டருளல் திரியையும்; கிருஷ்ணகந்தந் தரிப்பது அதாவது சாந்து சேவை செய்தல் யாவையுந் தன்னுளொடுக்கித் தான் தனித்திருக்கும் நிலையாகிய சம்மாரத்தையும், வெள்ளைச் சாத்து ஆன்மாக்களுக்கு வினைப்பயனை மறைத்து ஊட்டுவித்தலாகிய திரோபவத்தையும், தரிசனம் அனுக்கிரகத்தையுங் குறிப்பிடுகின்றது. இது ஆருத்திரா தரிசனமெனப் பெயர் பெறுமே தவிர, உற்சவமெனப் பெயர்பெறுவதில்லை. தரிசிக்க முத்தி தரும் இத்தகைய நடராஜ மூர்த்தியினது விசேஷ தரிசனம் கிடைப்பது இம் மார்கழி மாதத்திலேயா மென்க.

இதுவல்லாமல், எல்லாம்வல்ல பெருமானாகிய நம் சிவபெருமான், தேவர்களும், அசுரர்களும் உய்யும்பொருட்டுத் திருப்பாற்கடலிற் றோன்றிய ஆலகால விஷத்தையுண்டு திருநீலகண்டரானதும் இம் மார்கழியிலேயா மென்க. இவ்வாறு விஷத்தை யுண்டதனாற் பெருமான், தாமொரு தீமையடைந்தாரில்லையாயினும், ஓர் திருவிளையாடல் செய்யக்கருதி, ஒரு க்ஷணப் பொழுது ஒன்றுங் கூறாராய், உமாதேவியார் தம்மை யுபசரிக்கும்படி மௌனமாய்ச் சயனித்திருந்தனர். அது கண்ட அமரர், அரனை யருச்சித்தனர். அத்திதியை யான்றோர் "ஏகாதசி" என்பர். அற்றைய நாள் முற்று முணவில்லாது, அன்றிரவெல்லாம் நித்திரையின்றி மறுநாளாகிய துவாதசியிற் பண்ணவர் பாரணஞ் செய்தனர். இதுவே சைவர்களாலும் வைணவர்களாலும் "ஏகாதசி விரதம்" என மிக்கச் சிறப்பாய் நோற்கப்படுகின்றது. சிவபெருமான் ஏகாதசி திதியில் விஷமுண்டன ரென்பதை,

> "பொங்கு கங்காதரன் காளமயின்றே யொன்றும்
> புகலாம லிருந்தனனோர் கணப்பொழுது புலவோர்
> அங்கவனை யிடைவிடா தருச்சனை முன் புரிந்தார்
> அத்திதியே காதசியாம்"

என வரும் ஆகமத்திரட்டா னறிக. சிவபெருமானின் முதலடியாரும், மும்மூர்த்திகளில் ஒருவருமாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அன்னாகார நித்திரையின்றி அவ்வேகாதசியில் விரத மனுஷ்டித்து, துவாதசியிற் பாரணஞ் செய்தமையால் திருமாலடியவர்களாகிய வைணவர்கள், இவ்வேகாதசி தினத்தை மிக்கச் சிறப்பாகக் கொண்டாடி, அதுபோல விரத மனுஷ்டித்து துவாதசியிற் பாரணம் செய்கின்றனர். இவ்விரதத்தை விதிப்படி யனுஷ்டித்தவர்களுக்கு சாக்ஷாத் கண்ணபிரான் ஸ்ரீ வைகுண்ட சேவையை யருள்கிறாரென்பது வைணவாகம வழக்கு. மார்கழி மாதம் சுக்கிலபக்ஷ ஏகாதசி திதியில் வைணவாலயங்களில் நடத்தப் பெறும் "சொர்க்க வாயில் திறத்தல்" என்னுந் தூய விழா இவ்வுண்மையை யுறுதிப்படுத்தும். இத்தகைய பெருமை வாய்ந்த ஏகாதசி விரதமும், சொர்க்க வாயில் திறத்தலும் இச்சீரிய மார்கழி மாதத்திலேயா மென்பதை யன்பர்கள் கவனிப்பாராக.

தவிர, போகத்தில் மிக்கோனாகிய தேவராஜனுக்குச் செய்விக்கப் பெறும் "போகி பண்டிகை" என்னும் கொண்டாட்டமும் இம்மார்கழியில் தான் என்பது யாவருமறிந்த விஷயம். கார் காலத்தில் விதைக்கப் பெறும் செந்நெல் முதலிய நன்செய்த் தானியங்கள் மார்கழியில்

அறுவடை செய்யப்படுகின்றன. இப்பிரதான உணவுத் தானியங்கள், மின்னல், இடி முதலிய கருவிகளோடு கூடிய மேகம், சூரியன், சந்திரன், வாயு முதலியவற்றின் உதவியால்தான் விளைகின்றன. மேற்கூறிய ஒவ்வொன்றிற்கும் அதி தேவதைகள் உண்டென்பதும்; அத்தேவதைகள் திருப்தி செய்விக்கப் பட்டால்தான் உலக க்ஷேமத்திற்குரிய கால மழை பெய்தல் முதலியவை சம்பவிக்கு மென்பதும், தேவர்களுக்கெல்லாம் இந்திரனே தலைவனென்பதும் ஆரியமதக் கொள்கையாம். ஆகையால் நம் நாட்டவர்களுக்குச் சீவாதாரமான தானியங்கள் விளைதற்குக் காரணமாயிருந்த மேகம், சூரியன் முதலியவற்றுக்குத் தலைவனாகிய இந்திரனுக்கு நன்றி பாராட்டுதலாக, புதிய செந்நெலரிசியால் செய்த பொங்கல் முதலியவற்றைப் படைத்துக் குதூகலமடைவது, நந்தமிழ் மக்களின் பண்டைய வழக்கமாயிருந்து வந்தது. அதனால் உலக க்ஷேமத்திற்குத் தானே காரணபூதனென எண்ணித் தேவேந்திரன் கர்வங் கொண்டிருந்தான். அதையறிந்த கண்ணபிரான் அன்னோன் கொண்டுள்ள கர்வத்தை யடக்கக்கருதி, அவனுக்குரிய பெரும் பொங்கல் விழாவைத் தனக்குரித் தாக்கிக் கொண்டனன். இதனால் தேவேந்திரன் கோபங் கொண்டு, கண்ணபிரானையும் அவருடனிருந்த கோபாலரையும் கோக்களையும் வருத்த நினைத்துக் கன் மாரி பெய்வித்தனன். அச்சிலா வருஷத்தைக் கண்ணன், கோவர்த்தன கிரியை எடுத்துக் குடையாகப் பிடித்துத் தடுக்கக்கண்ட இந்திரன், கீழிறங்கி வந்து நெடுமாலை வணங்கி, "எம்பெருமானே! யான் அறிவீனத்தாற் செய்த குற்றத்தை மன்னித்தருளி, பொங்கல் விழாவைப் பழையபடியே அடியேனுக்குரித்தாக்க வேண்டு"மென்று பிரார்த்தித்தான். மாயனும் மனமிரங்கித் தேவராஜனை நோக்கி 'ஏ! புரந்தரனே! உன் கருவத்தாலிழந்த பொங்கல் விழாவை மறுபடியும் நீ பெறுயாயினும், மார்கழிக் கடைசி நாளை யுனக்குரித்தாக்கினோம். அன்று உன்னை யாரும் பூஜிக்கக் கடவர். அது உன் பெயராலேயே 'போகி பண்டிகை' என்று வழங்கப்பெறும்" என்று கட்டளை யிட்டனர். ஆகவே பொங்கல் பரமபத வாசனாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்திக் குரித்தாய், சூரியன் மூலமாய் ஆராதிக்கப்பெறும். பொங்கற் பண்டிகையானது, சங்கரர்க்கே யுரித்தென்பதும், அதனால் சங்கர ஆராதனை அல்லது சங்கராந்தி பண்டிகையென்று வழங்கப் படுகின்றன வென்பதும் சைவர்கள் கொள்கை.

மேற்கண்ட காரணங்களால் இம்மார்கழி மாதமானது மற்றெல்லா மாதங்களையும்விட மிக்க சிரேஷ்டமான தென்பது உள்ளங்கை நெல்லிபோல் நன்குணரக் கிடக்கின்றது இதன்றி இம்மாதம், காலையில் மனிதர்க்குப் பித்தம் அதிகமாய் மேலெழுங்கால மாகையால், அக்காலத்தில் ஸ்நானம் செய்வதாலும் பிறகு பயறு, மிளகு, பச்சரிசி, நெய் முதலியவைகளும், சர்க்கரை, பால் பழம் முதலியவைகளுமாகிய சத்துவகுண பதார்த்தங்களால் செய்யப்பட்ட பொங்கல், பாயசம் முதலியவற்றை யுட்கொள்வதனாலும் திரேகத்திற்கு ஆரோக்கியமும் சுகமும உண்டாகின்றது. இதுவுமன்றி, பொதிகை மலையிலிருந்து மார்கழி மாதத்தில் ஒருவித சஞ்சீவி கலந்த காற்று பிராதகாலத்தில் வீசுகின்றது. அம்மலையில், உயர்ந்த மூலிகைகளும் சஞ்சீவியும் இருப்பது உண்மை யென்பது ஆன்றோர்களின் கொள்கை. உண்மையுமதுவே. ஆதலால் பிராதகாலத்தில் இம்மாதத்தில் வெளிவந்துலாவுவதால், தேகத்திற்குப் பெரும்பாலும் சுகத்தைக் கொடுக்கின்றதென்பது மருத்துவ நூலார் கண்ட

திந்த உண்மை. நமது முன்னோர்கள் விதித்த விதியின் கருத்து மிதுவே யாகும். நமது ஆன்றோர்கள் ஏற்படுத்தியுள்ள ஒவ்வொரு விஷயமும், இலெளகிக ஆன்மார்த்த இலாபங்களை யளிக்கத் தக்கவைக ளென்பதும், மிக்க நுட்பமாகிய சாஸ்திர ஆராய்ச்சியின் பயனாய் ஏற்படுத்தப்பட்டவைக ளென்பதும் உண்மை. அவற்றின் காரணமறியாத சிலர், அவற்றை யலட்சியம் செய்கின்றனர். ஆனால் இப்போது வரவர அவர்களும் உண்மையை யுணர்ந்து கொள்ளுகிறார்கள்.

அன்றியும், நமது பண்டைப் பெரியோர்கள் இம்மாதத்தை, ஸ்நான ஜெபதப அனுஷ்டானாதி கருமங்களுக்கும், தேவாலயங்களில் புலரிப்பூஜை யாதி விக்ரஹாராதனை வழிபாட்டிற்கும் உரிய விசேஷ காலமாகக் கொண்டிருக்கிறார்கள்.

"போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன் மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோ ரெம்பாவாய்"

என்று நமது மணிவாசகப் பெருந்தகையார், தமது திருவாசகத்துட் கூறியிருக்கின்றனர். வைணவ அடியார்களிற் சிறந்த ஆண்டாளம்மையார் அவர்களும் தமது திருப்பாவையில்,

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளாம்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்"

என்று இம்மாதத்தின் சிறப்பினை விதந்து கூறி யிருக்கின்றனர்.

ஆதலால், சகோதர சகோதரிகளே! இத்தகு சிறப்பினை வாய்ந்த இம் மார்கழி மாதத்தில் பிராதக்காலத்தில் எழுந்து வீடுகளைச் சுத்தம் செய்து அலங்கரித்து, ஸ்நான ஜெபதப அனுஷ்டானாதி கருமங்களை முடித்து, கடவுட்பூஜை செய்து, தேவார, திருவாசக, பிரபந்தமாதிய தோத்திரப் பாக்களோதி, இறைவனருளால் இம்மை மறுமை யான்மார்த்த லாபங்களை யடைய முன் வருவீர்களாக!





# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

## தேவீ மஹாத்மியம்.

### ஒன்பதாவது அத்தியாயம்.

ராஜா சொல்வது (1-2)

பகவானே! ரத்த பீஜபிதத்தோடு கூடின இந்த விசித்திரமான தேவீ சரித்திர மார்க்கம் தாங்கள் எனக்கு சொன்னீர்கள். திரும்பவும் கேட்க எனக்கு ஆசையிருக்கிறது. ரக்த பீஜனைக் கொன்ற பிறகு அதிகோபிஷ்டர்களான சாம்பனும், நிசும்பனும் என்ன செய்தார்கள்?

மஹரிஷி சொல்வது (3-39)

ரக்தபீஜனும் மற்ற அஸுரர்களும் கொல்லப்பட்ட பின்பு, சும்பாசுரனும் நிசும்பாசுரனும் அதிக கோபமடைந்தார்கள். தன்னுடைய பெரிய சேனையை தேவி கொன்று கொண்டிருப்பதைப் பார்த்த நிசும்பன் அதிக கோபத்தோடுகூட வேறொரு பெரிய சேனையுடன் வந்தான். அவனும் முன், பின் பக்கங்களிலிருந்த அசுரப் படையும் அதி கோபத்தோடு உதடு கடித்துக் கொண்டு தேவியைக் கொல்வதற்கு அவளருகில் சென்றனர். மஹா வீரியவானான ஸும்பாஸுரனும் தன் சைன்யத்தால் சூழப்பட்ட மாதிரு கணங்களோடு யுத்தம் செய்துவிட்டு பிறகு கோபத்தோடுகூட சண்டிகையிடம் கொல்லுவதற்காக வந்தான். உடனே தேவிக்கும், மேகங்களைப்போல அதி உக்கிரமாக சரவர்ஷம் பொழிகின்ற சும்ப நிசும்பர்களுக்கும் பெரிய ஒரு யுத்தம் ஆரம்பித்தது. அவர்கள் பிரயோகித்த சரங்களை சண்டிகை தன் சரவரிசையால் முறித்துவிட்டாள். அஸுரர்களுடைய தேஹம் பூராவும் ஆயுதப் பிரயோகம் செய்தாள். நிஸும்பன் கூர்மையான தன் வாளையும், அதிகமான ஒளி வீசுகின்ற தன் பரிசையையும் எடுத்துக்கொண்டு தேவியின் உத்தம வாஹனமான சிங்கத்தின் தலையை இலக்காக்கி வெட்டினான். வாஹனத்தை வெட்டினவுடன், நிஸும்பனுடைய சிரேஷ்டமான வாளையும், எட்டு குமிழுள்ள பரிசையையும் தேவி தன் கத்தி யம்புகளால் முறித்துவிட்டாள். வாளும் பரிசையும் முறிந்துபோன பிறகு அஸுரன் வேலாயுதத்தைப் பிரயோகித்தான். தன்னிடம் வருகின்ற அந்த வேலாயுதத்தை தேவி, சக்கரத்தால் இரண்டு துண்டாக்கினாள். உடனே கோபிஷ்டனான நிசும்பாஸுரன் சூலத்தைப் பிரயோகித்தான். தன்னை நோக்கிவருகின்ற அதையும் தேவி முஷ்டியால் துண்டாக்கினாள். பிறகு அவன் கெதாயுதத்தை சண்டிகையை நோக்கி எறிந்தான். அதையும் தேவி திரிசூலத்தால் முறித்துச் சாம்பலாக்கினாள்.

பிறகு வெண்மழு வெடுத்து போர் செய்கின்ற அஸுரனை தேவி பாணங்களால் பூமியில் வீழ்த்தினாள். அந்த பீமவிக்கிரமனை நிஸும்பன் தலைமீது வீழ்ந்ததும் ஸும்பன் அதிக கோபத்தோடு தேவியை நிக்கிரகிக்கச் சென்றான். தேரிலிருக்கின்ற அவன் சிரேஷ்ட ஆயுதங்களைத் தரித்து அதியுன்னதமாய், நிஸ்துல்யங்களாய், இருக்கின்ற எட்டு கைகளோடு ஆகாசத்தை அளாவிப் பிரகாசித்தான். அவன் வருவதைப் பார்த்த தேவி சங்கநாதஞ் செய்து அதிதுஸ்ஸஹமான சிறுஞாணொலியும் செய்தாள். எல்லா அஸுரப்படையினுடைய வீரியத்தை இல்லாமல் செய்யவல்ல தன் மணியோசையால் திக்குகளை நிறைத்தாள்; உடனே ஸிம்ஹம், யானைகளுடைய அதிகர்வத்தை அகற்றவல்ல மஹாகர்ஜனை செய்துகொண்டு ஆகாசம் பூமி ஆகிய பத்து திக்குகளையும் நிறைத்தது. காளி மேலே குதித்து ஆகாசத்தையும் பூமியையும் கைகள் கொண்டடித்தாள். அந்த சப்தத்தால் முன்னுடையிருந்த சப்தங்கள் கேட்கப்படவில்லை. சிவதூதி அதிகமாக அட்டஹாசம் செய்தாள். அந்த சப்தங்களால் அஸுரப்படை அதிக பயத்தை அடைந்தது. உடனே ஸும்பன் அதிக கோபம் கொண்டான். 'துஷ்டா, நில்லு, நில்லு" என்று தேவி சொன்னபொழுது ஆகாசத்தில் தேவர்கள், "ஜெயமுண்டாகட்டும்" என்று கோஷம் செய்தார்கள்; ஸும்பன் அக்னி ஜ்வாலையோடுகூடின ஒரு பயங்கரமான வேலாயுதத்தை பலமாக எறிந்தான். தேவி அதை மஹோதகை என்பதனால் இல்லாமல் செய்துவிட்டாள். ஸும்பனுடைய ஸிம்மநாதத்தால் திரைலோக்யமும் கோஷித்தது. ராஜாவே! அது இடியோசைபோலுள்ள கோரமான சப்தத்தை ஜயித்தது. ஸும்பன் விட்ட சரங்களைத் தேவியும் தேவி விட்ட சரங்களை ஸும்பனும் தங்கள் தங்கள் சரங்களைக் கொண்டு அனேக ஆயிரங்களாக முறித்தனர். பிறகு சண்டிகை கோபத்தோடு அவனை சூலத்தால் குத்தினாள். அந்த குத்துபட்டதும் ஸும்பன் மூர்ச்சையாகி பூமியில் விழுந்தான். அப்பொழுது நிஸும்பன் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்தான். வில்லும் கையுமாக வந்து தேவியையும், காளியையும் ஸிம்ஹத்தையும் அம்புகளால் எய்தான். பிறகு தானவாதிபன் பதினாயிரம் கைகளுடன் தோன்றி பதினாயிரம் சக்கரங்களால் சண்டிகையை மூடிவிட்டான். உடனே துர்க்கார்த்திநாசினியான துர்க்கா பகவதி கோபத்துடன் அந்தச் சக்கரங்களையும், பாணங்களையும், தன் கரங்களால் முறித்தாள். அப்பொழுது நிஸும்பன் கதை யெடுத்து அஸுரப்படை சூழ சண்டிகையைக் கொல்ல ஓடி வந்தான். வரும்பொழுதே அவனுடைய கதையைச் சண்டிகை தன் கூர்மையான வாளினால் முறித்தாள். உடனே அவன் சூலத்தை யெடுத்துக் கொண்டான். சூலமும் கையுமாக வருகின்ற அந்த நிஸும்பாசுரனை சண்டிகை பலமாக சுழற்றின சூலத்தால் நெஞ்சில் குத்தினாள். சூலத்தால் குத்தப்பட்ட அவனுடைய நெஞ்சிலிருந்து ஒரு மஹா வீரியசாலியான ஒருவன் வந்து 'நில்' என்றான். தேவி உடனேயே பலமாக சிரித்துக்கொண்டு அவனுடைய சிரத்தை வாளால் வெட்டினாள். உடனே அவன் பூமியில் விழுந்தான். அப்பொழுது சிங்கம் தன்னுடைய தீக்ஷணமான சிங்கப் பற்களால் கழுத்துகளைக் கடித்துப் பிடித்து பல அஸுரர்களைக் கொன்று தின்றது. மற்ற சிலரை காளியும், சிவதூதியும் தின்றார்கள். சில அஸுர முக்கியர்கள் கௌமாரியின் வேல் கொண்டு பிளக்கப்பட்டு நசித்தார்கள். மற்ற சிலர் பிரம்மாணியின் மந்திரசுத்தமான ஜலத்தால் இறந்தார்கள். வேறு சிலர் மஹேசவரியின் திரிசூல மேற்று இறந்தார்கள். சிலர் வாராஹியின் வத்திர

தாடனத்தால் தூளாகிவிட்டார்கள். வேறு சிலர் வைஷ்ணவியின் சக்கரத்தாலும், ஐந்திரியின் வஜ்ரத்தாலும் துண்டிக்கப்பட்டார்கள். சில அஸுரர்கள் இறந்தனர். சிலர் யுத்த பூமியிலிருந்து பயந்து ஓடினார்கள். பலர் கேசரிக்கும், சாமுண்டிக்கும், சிவதூதிக்கும் இரையானார்கள் என்று மார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மியத்தில் (9) நிஸும்ப வதம் என்ற ஒன்பதாவது அத்தியாயம்.

## பத்தாவது அத்தியாயம்.

### மஹரிஷி சொல்வது (1-2)

பிராண துல்ய ஸஹோதரனை நிஸும்பனைக் கொன்றதையும், சைனியத்தைக் கொன்றதையும் பார்த்து அதி கோபத்துடன் ஸும்பன் சொன்னதாவது:—"ஏ துஷ்டையான துர்க்கே! நீ தைரியமிருக்கிறது என்று கர்வமடையாதே! மற்றப் பெண்களுடைய பலத்தால்தானே நீ யுத்தம் செய்கின்றனை."

### ஸ்ரீதேவீ சொல்வது (3)

"துஷ்டா; இந்த லோகத்தில் நான் ஒருத்திதான் உண்டு. என்னைத் தவிர இரண்டாவது யாரிருக்கிறார்கள்? இந்த என் அம்சங்கள் இப்பொழுதே என்னிடத்தில் சேருவதைப் பார்."

### மஹரிஷி சொல்வது (4)

உடனே பிரம்மாணி முதலான தேவிகளெல்லாம் அந்த தேவியின் தேகத்தில் லயித்துவிட்டார்கள். அப்பொழுது அம்பிகை மாத்திரம் தனித்து நின்றாள்.

### ஸ்ரீ தேவி சொல்வது (5)

நான் என்னுடைய விபூதியினால் இங்கே பல ரூபங்களை எடுத்துக் கொண்டு நின்றேன். அவைகளை உபஸம்ஹரித்துவிட்டேன். இப்பொழுது நான் தனியாகவேதா னிருக்கின்றேன். நீ யுத்தத்தில் ஸ்திரமாக நிற்கவும்.

### மஹரிஷி சொல்வது (6-35)

பிறகு தேவியும் ஸும்பனும் தேவாஸுரர்கள் பார்த்துக்கொண்டிருக்க அதி பயங்கரமாக யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். அதி கூர்மையானதும், பயங்கரமானதுமான பல பாண, அஸ்திர, சஸ்திர வர்ஷங்களால் அவருடைய யுத்தம் உலகத்தை மறுபடியும் பயப்படுத்தினது. அம்பிகை நூறு நூறாக விட்ட திவ்ய அஸ்திரங்களை தைத்யேந்திரன் பிரதி அஸ்திரங்களை விட்டு நாசம் செய்தான். அவன் விட்ட அஸ்திரங்களைப் பரமேஸ்வரியும் உக்கிரமான ஹுங்காரத்தால் நசிப்பித்தாள். பிறகு அந்த அஸுரன் சரக்கூட்டத்தைக் கொண்டு தேவியை மூடினான். அதனால் கோபமடைந்த தேவி அம்புகளைக் கொண்டு வில்லை முறித்தாள். வில் முறிந்ததும் தைத்யேந்திரன் வேலாயுதத்தை எடுத்தான். அவன் கையில் அது இருக்கின்ற பொழுதே தேவி அதை சக்கரத்தால் முறித்துவிட்டாள். உடனே அஸுரராஜன் நன்றாக மின்னுகின்ற வாளும் நூறு குமிழ்களுள்ள பரிசையும் எடுத்துக் கொண்டு

தேவியைக் கொல்ல ஓடிவரும் பொழுது தேவி தன் கூர்மையான அம்பினால் சூரிய ரச்மியால் பளபளப்பாக மின்னுகின்ற வாளையும், பரிசையையும் முறித்தாள். குதிரைகளையும், ஸூதனையும், தேரையும் கீழே தள்ளினாள். குதிரைகளும் ஸூதனும் இறந்தார்கள்; வில் முறிந்த அந்த தைத்யன் உடனே தேவியைக் கொல்வதற்கு கடோரமான முத்கரத்தை எடுத்தான். அந்த முத்கரத்தையும் தேவி தன் அம்பினால் முறித்தாள். ஆனாலும் தைரியத்தோடுகூட தன் முஷ்டியால் தேவியைக் கொல்ல ஓடிச் சென்றான். ஓடி தேவியினுடைய மார்பில் அஸுர சிரேஷ்டன் அடித்தான். தேவியும் அப்படியே அவனுடைய மார்பிலும் அடித்தாள். அடிபட்ட தைத்யராஜன் கீழே தரையில் விழுந்தான். உடனே முன் பலத்தால் எழுந்திருந்தான். உடனே தேவியின் மேலே ஏறி ஆகாசத்தை அடைந்தான். அங்கும் நிராதாரையாக அம்பிகை அவனோடு யுத்தம் செய்தாள். அப்பொழுது ஆகாசத்தில் சித்த முனிகள் அதிசயப்படும்படி அஸுரனுக்கும் சண்டிகைக்கும் பாஹு யுத்தம் நடந்தது. வெகு காலம் அவனோடு யுத்தம் செய்துவிட்டு தேவி அவனை யெடுத்துத் தூக்கி சுழற்றி பூமியில் எறிந்தாள். அந்த துஷ்டன் பூமியில் வீழ்ந்து; பிறகு எழுந்து சண்டிகையைக் கொல்ல முஷ்டியை ஓங்கிக்கொண்டு வேகமாக ஓடும்பொழுது, தேவி அவனை சூலாயுதத்தால் மார்பில் குத்தி பூமியில் தள்ளினாள். தேவியின் சூலாக்கிரமேற்று முறிக்கப்பட்ட அவன், கடல்களும், மலைகளும், தீவுகளும் உள்ள பூமி முழுவதும் நடுங்கும்படி இறந்து பூமியில் விழுந்தான். அந்த துஷ்டனைக் கொன்ற உடன் உலகங்களெல்லாம் சந்தோஷமாக முன்னிலைமையை அடைந்தன. ஆகாசம் நிர்மலமாயிற்று; உத்பாத மேகங்களெல்லாம் நீங்கிவிட்டன. தேவி ஸும்பனைக் கொன்றதும், நதிகள் சரியாக ஓடின. அவனைக் கொன்றபொழுது தேவர்கள் எல்லாம் அதிக சந்தோஷமுடையவர்களானார்கள். கந்தர்வர்கள் நன்றாகப் பாடினார்கள்; சிலர் வாத்தியங்களை வாசித்தார்கள்; அப்ஸரஸ்திரீகள் ஆடினார்கள்; நல்ல காற்று வீசினது; சூரியன் தெளிந்து பிரகாசித்தான்; அக்னிகள் சாந்தமாக ஜ்வலித்தன; திக்குகளில் சப்தங்கள் அடங்கின.

என்று மார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மீயத்தில் (10) ஸும்பாஸுரவதம் என்ற எண்பத்தேழாம் அத்தியாயம்.

## பதினொன்றாவது அத்தியாயம்.

மஹரிஷி சொல்வது (1)

அந்த மஹா அஸுரனை தேவி கொன்ற பிறகு இந்திரன், அக்னி முதலான தேவர்கள் இஷ்டலாபத்தால் விகஸிதமான முகபத்மங்களைக் கொண்டு திக்குகளை விளங்கச் செய்துகொண்டு கார்த்தியாயினியை ஸ்துதி செய்தார்கள்.

தேவர்கள் சொல்வது (2–34)

ஹே தேவி! பக்த ஆர்த்திநாசினி காப்பாற்றுக! ஸகல ஜகத்துக்கும் தாயாரே, காப்பாற்றுவாயாக; ஹே விசுவேசி பிரஸீத! இந்த உலகத்தைப் பாலிக்கவும்! ஹே சராசரேசுவரி நீ காப்பாற்றக்கூடியவளன்றோ? (3)

நீ பூமியாக இருப்பதனால் இந்த உலகத்திற்கு ஆதாரவு நீயன்றோ! ஹே அதிக பராக்கிரமசாலியே! ஜல ரூபமாக இருந்து நீ இந்த உலகத்தை வளர்க்கின்றனை (3) அளவிட முடியாத வீரியமுள்ள முகுந்தனுடைய சக்தியான வைஷ்ணவி நீ! உலகத்தோரையெல்லாம் நீ மாயைக்குள்ளாக்குகின்ற மாயை நீயே. அந்த மயக்கத்தில் இருந்து தெளிந்து உன்னை அறிந்தவர்களுக்கு நீ முக்தியைக் கொடுக்கின்றனை. (4)

ஸகல வித்தைகளும் சகல ஸ்திரீகளும் உன்னுடைய ரூபபதங்களேயாம். ஹே தேவீ! இந்த புவனம் பூராவும் நிறைந்திருக்கும் தாயும் நீயே! அப்படியிருக்க உன் குண விசேஷங்களைக் குறித்து எப்படி எங்களால் ஸ்துதி செய்ய முடியும்? (5)

ஸ்வர்க்கம், மோக்ஷம், இவைகளைத் தருகின்ற தேவி நீயே! ஸமஸ்த பூத ரூபமாயிருக்கிறாய்! உன்னை சிரேஷ்டமான ஸ்துதி செய்வதற்கு நல்ல வசஸ்ஸு என்ன இருக்கின்றது? நீயே சிரேஷ்டமான வாக்குகளாக இருக்கின்றனை. (6)

ஜனங்களுடைய ஹிருதயத்திலெல்லாம் ஹே தேவி! நீ புத்தி ரூபிணியாக இருக்கின்றனை. ஸ்வர்க்கம், அபிவர்க்கம் இவைகளைக் கொடுக்கும ஹே நாராயணி உனக்கு நமஸ்காரம். (7)

கலை, காஷ்டம் முதலான ரூபத்தோடு பல பரிணாமங்களைக் கொடுக்கும் ஹே தேவி! உலகத்தை யெல்லாம் இல்லாமலும் செய்ய சக்தியுள்ள ஹே தேவி! உனக்கு நமஸ்காரம். (8)

ஸமஸ்த மங்களங்களுக்கெல்லாம் மங்களமானவளே! ஹே சிவே! ஸர்வார்த்தங்களையும் கொடுப்பவளே! ஹே கௌரீ! ஹே திரயம்பிகே! உனக்கு நமஸ்காரம். (9)

ஸ்ருஷ்டி, ஸ்திதி, நாசம் இதுகளுக்கு சக்தியானவளே! ஹே ஸனாதனி! குணாச்ரயே! குணமயே! உனக்கு நமஸ்காரம். (10)

சரணமடைந்த தீனர்கள், ஆர்த்தர்கள் இவர்களை ரக்ஷிக்கும் குணமுடையவளே! ஸகல ஸங்கடங்களையும் இல்லாமல் செய்யும் ஹே தேவியான நாராயணியே உனக்கு நமஸ்காரம். (11)

ஹம்ஸத்தோடு கூடின விமானத்திலிருந்து, பிரம்மாணி ரூபத்தோடு பரிசுத்தமான தர்ப்பை நீரைத் தெளிக்கின்ற ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (12)

திரிசூலம், சந்திரன், ஸர்ப்பம் இவைகளைத் தரித்து பெரிய விருஷப வாஹனத்தின் மீது மாஹேசுவரீ ரூபத்தோடுகூட இருக்கும் ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (13)

மயில், கோழி, இவைகளோடு கூடின பெரிய சக்தி என்ற வேலாயுதத்தைத் தரித்துக்கொண்டு கௌமாரி ரூபத்தோடு இருக்கின்ற ஹே நாராயணி உனக்கு நமஸ்காரம். (14)

சங்கு, சக்கரம், கதை, சாரங்கம் முதலான பெரிய சஸ்திரங்களை தரித்து வைஷ்ணவி ரூபத்தோடு கூடின ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (15)

மஹா உக்கிரமான சக்ரத்தை கையில் தரித்து தன் வீரப் பற்களால்

பூமியைத் தூக்கி நிறுத்தின வாராஹி ரூபத்தோடுகூடின ஹே நாராயணி! நமஸ்காரம். (16)

உக்கிரமான நரஸிம்ம ரூபத்தோடு அஸுரர்களைக் கொல்லத் தயாராகி மூவுலகத்தையும் காத்த ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (17)

கிரீடமும், மஹா வஜ்ராயுதத்தையும் தரித்து ஒரு ஆயிரம் கண்களோடு கூடி விருத்ராஸுரனைக் கொன்ற ஹே ஐந்திரியான நாராயணி! உனக்கு நமஸ்காரம். (18)

சிவதூதி ஸ்வரூபத்தோடு தைத்யர்களைக் கொன்ற அதி பலசாலியான ஹே கோரரூபே, மஹாராவே! நாராயணி! உனக்கு நமஸ்காரம். (19)

வீரப் பற்களால் பயங்கரமான முகத்தோடு கூடினவளே! தலைகளை மாலைகளாக அணிந்திருப்பவளே! சாமுண்டே, முண்டாசுரனைக் கொன்றவளே, நாராயணி! உனக்கு நமஸ்காரம். (20)

லக்ஷ்மி, லஜ்ஜை, மஹாவித்யை, சிரத்தை, புஷ்டி, ஸ்வதை, துருவை, மஹாராத்ரி, மஹாமாயை ஆகிய ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (21)

மேதை, ஸரஸ்வதி, தமோகுணை விகே, பூதிகாயினி, பரம தெய்வம், மஹேசுவரி ஆகிய ரூபத்தோடும் அனுக்கிரகிக்கின்ற ஹே நாராயணி! உனக்கு நமஸ்காரம். (22)

ஸர்வ ஸ்வரூபே, ஸர்வேசே, ஸர்வசக்தி ஸமன்விதே, பயமுண்டாகாமல் எங்களைக் காப்பாயாக. நாராயணி உனக்கு நமஸ்காரம். (23)

அதிக அழகான உன் முக்கண்களோடு கூடிப் பிரகாசிக்கின்ற உன் முகம் சகலவிதமான பூதங்களி லிருந்து உண்டாகக்கூடிய ஆபத்துகளி லிருந்து ஹே காத்தியாயினி காப்பாற்றவேண்டும்; உனக்கு நமஸ்காரம். (24)

அதிக ஜ்வாலையோடுகூட உக்கிரமாக, எல்லா அஸுரர்களையும் மூலத்தோடு நாசம் செய்த உன் சூலம், இனிமேல் எங்களுக்கு பயம் உண்டாகாமல் காப்பாற்றவேண்டும். ஹே பத்ரகாளி உனக்கு நமஸ்காரம். (25)

உலகம் நிறைந்த சப்தத்தால் தைத்யர்களுடைய வீரியத்தை இல்லாமல் எது செய்ததோ அந்த மணி தன் மக்களைக் காப்பதுபோல் எங்களைச் சகல கஷ்டங்களி லிருந்தும் காப்பாற்றவேண்டும். (26)

அஸுரர்களுடைய ரத்தம், வஸா, ஆகிய அழுக்குடைய உன் கையிலுள்ள வாள் எங்களுக்கு மங்களத்தைக் கொடுப்பதாகக் கடவது. நாங்கள் ஹே சண்டிகே! உன்னை வணங்குகின்றோம். (27)

நீ அருள்புரிந்தால் சகல ரோகங்களும் நீங்கும், சகல இஷ்ட சித்தியும் உண்டாகும். உன்னை யடைந்த பேர்களுக்கு ஒரு ஆபத்துமே அணுகாது. உன்னை ஆச்ரயிப்பவர்களை நீ காப்பாற்ற வேண்டியவ ளன்றோ! (28)

உன் சரீரத்தை பலவித உருவமாக்கிக்கொண்டு அதர்மிஷ்டரான தைத்ய சிரேஷ்டர்களை நிச்சேஷமாக்கினதுபோல ஹே தேவி! அம்பிகே! யார் செய்வார்கள்! (29)

வித்யை, சாஸ்திரம், விவேக தீபம் முதலான வாக்யங்களெல்லாம் இருந்தாலும், மஹா அந்தகாரம் (இருட்டு) ஆகின்ற மமத்வம் (நான் என்ற பாவம்)

என்ற பெரிய குழியில் உன்னை யன்னியில் யாரால் தள்ளப்பட்டு சுழலும்படி செய்ய முடியும்? (30)

கோரமான விஷத்தோடுகூடின பாம்பு, காட்டுத்தீ, சோரக் கூட்டம், அஸுரர்கள், சத்துருக்கள், சமுத்திர மத்தியம், ஸம்சார பந்தம் இவைகளி லிருந்து நீ உலகைக் காக்கின்றாய்! (31)

ஹே விசுவேசுவரீ! நீ விசுவத்தைக் காப்பாற்றுகின்றாய், விசுவரூபே! நீ விசுவத்தைச் சுமக்கின்றாய், நீ விச்வேசவந்தியை, உன்னை பக்தியுடன் பூஜிப்பவர்கள் விசுவ அவலம்பராகுவார்கள். (32)

இப்பொழுது சத்துருக்களைக் கொன்றதுபோல் எப்பொழுதும் நீ மனத் தெளிவோடு எங்களை கைவிடாமல் காப்பாற்றவேண்டும். ஜகத்துக்குண்டா கும் உத்பாத பாகத்தால் உண்டாகும் மஹா உபத்திரவங்களைத் தாமஸமன்றி நாசம் செய்வாயாக. (33)

கைகூப்பியவரை காக்க ஹே தேவி! நீ விசுவதுக்க ப்ரணாசினி யன்றோ! உலகம் மூன்றிலும் உள்ளவர்கள் புகழுகின்ற நீ உலகத்தோர்க்கு வரம் அருளுக. (34)

தேவி சொல்வது (35)

ஹே தேவர்களே! நான் வரம் தருகின்றேன். உங்களுக்கு வேண்டி யதைக் கேட்கவும். லோக உபகாரத்திற்காக அதை நான் தருகின்றேன்.

தேவர்கள் சொல்வது (36)

ஹே ஸர்வேசுவரி! இந்தப்படிக்கு எங்களுடைய சத்துருக்களைக் கொன்று மூன்று லோகங்களுக்கும் உண்டாகின்ற கஷ்டங்களை நீக்குவது என்பதே தாங்கள் செய்யவேண்டியதாக எப்பொழுதும் உள்ளது.

தேவி சொல்வது (37—51)

வைவஸ்வத மன்வந்தரத்தில் இருபத்தெட்டாவது யுகத்தில் வேறொரு ஸும்பநிஸும்பர்கள் என்ற அஸுர சிரேஷ்டர்கள் உண்டாகப்போகிறார்கள். அவர்களை நான் நந்தகோப வமிசத்தில் யசோதையினுடைய மகளாகப் பிறந்து விந்தியமலையில் வஸித்துக்கொண்டு நாசம் செய்வேன். பிறகு நான் அதி ரௌத்திரமான ரூபத்தோடுகூட பூமியில் அவதாரம் செய்து வைப்பிரசித்தியி னுடைய ஸந்ததிகளான அஸுரர்களைக் கொல்வேன். அந்த உக்கிரர்களான வைப்பிரசித்த அஸுரர்களைத் தின்றதனால் என் பற்கள் மாதுளை பூபோல சிவப்பு நிறமாக இருக்கும். ஆகையால் ஸ்வர்க்கத்தில் தேவர்களும் பூமியில் மனுஷ்யர்களும் என்னை எப்பொழுதும் ரக்ததந்தீ என்று சொல்லி ஸ்தோத் திரம் செய்வார்கள். மறுபடியும் நூறு வருஷ காலம் மழையே பெய்யாமல் பூமியில் தண்ணீரே யில்லாமல் ஆகி மஹரிஷிகளால் நான் ஸ்துதி செய்யப் படப்படும் பொழுது நான் அயோனிஜையாக அவதரிப்பேன். அன்று நான் நூறு கண்களைக் கொண்டு மஹரிஷிகளைக் கடாக்ஷிப்பேன். அப்பொழுது மனிதர்கள் என்னை சதாக்ஷீ என்று அழைப்பார்கள். ஹே தேவர்களே!

பிறகு மழையுண்டாகிறவரையிலும் பிராணனைக் காப்பாற்றுவதற்கு உதவும் சாகங்கள் (கீரைகள்) என் சரீரத்திலிருந்து உண்டாகும். அதனால் நான் உலகத்தைக் காப்பாற்றுவேன். அப்பொழுது என்னை சாகம்பரி என்று அழைப்பார்கள். அன்றே நான் துர்க்கமன் என்ற அஸுரனைக் கொல்வேன்; அதனால் துர்க்காதேவி என்ற பெயர் எனக்குண்டாகும். பிறகு நான் ஒரு பீமமான உருவத்துடன் ஹிமாலய பர்வதத்தில் முனிகளுடைய ரக்ஷணத்திற்காக ராக்ஷஸர்களை பக்ஷணம் செய்வேன். அப்பொழுது மஹரிஷிகள் எல்லோரும் என்னை வணங்கி ஸ்துதி செய்வார்கள். அதனால் எனக்கு பீமாதேவீ என்ற பிரசித்தமான பெயருண்டாகும். அருணன் என்பவன் மூன்று உலகங்களையும் உபத்திரவிக்கும் பொழுது நான் அனேக ஆறு கால்களோடு கூடின வண்டு ரூபத்தோடு திரைலோக்யத்தின் நன்மைக்காக அந்த அஸுரனைக் கொல்வேன். அப்பொழுது என்னை உலகத்தோர் எல்லோரும் ப்ராமரி என்று தோத்திரம் செய்வார்கள். இப்படி யெல்லாம் எந்தெந்த சமயங்களில் அஸுரர்களால் கஷ்டம் நேரிடுமோ அப்பொழுதெல்லாம் நான் அவதரித்து சத்ருக்களைக் கொல்வேன்.

என்று மார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மியத்தில் (11) நாராயணீ ஸ்துதி என்ற எண்பத்தெட்டாவது அத்தியாம்.

---






## 46. இங்கிலாந்தில் தொழில்முறைப் புரட்சி.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

"இங்கிலாந்தின் பூஸாரம் ஏராளமான விளைபொருள்கள் உண்டாவதற்கு ஏற்றதல்ல. பயிருக்கு இன்றியமையாத சூரிய வெப்பம் அங்கே மிகக் குறைவு. மேற்பரப்பின் பெரும்பாகம், பனி மூடிய சிகரங்களுள்ள கரடு முரடான மலைப்பிரதேசமானது. தென்கிழக்கு, கிழக்கு, வடகிழக்கு பக்கங்களிலுள்ள குறைந்த விஸ்தீரணமே சொல்ப விவசாயத்திற்கு லாயக்கானது. அங்கேயும் ஏக தேசத்தில், கோதுமை, கீரை, பழம், கிழங்கு, புஷ்பம், காய்கறி வகைகளை விளைவிக்கலாம். அப்படிச் செய்வதற்கும் ஏராளமான செலவு ஆகும். அதிக செலவைப் பொருட்படுத்தாமல், முயன்றாலும் தேச மக்கள் பலருக்கும் போதுமான அளவுக்கு விளையாது. அப்படி விளையச் செய்வதும் எக் காலத்திலும் சாத்தியமில்லை" என்பது பூகோள சம்மதமான ஒரு உண்மை. ஆகவே, ஆங்கிலேயர்கள் தங்களுடைய உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுக்குரிய பொருள்களை பிறநாடுகளிலேயே பெறவேண்டும் என்பது நன்கு விளங்கும்.

ஆனால் ஆண்டவன் அவர்களுடைய மலைகளில் ஏதேஷ்டமான இரும்பு, நிலக்கரி, சுண்ணாம்பு நிறைந்து கிடக்கும் சுரங்கங்களை யமைத்திருக்கிறான்! இரும்புத் தாதுகளைத் தோண்டி எடுத்து, நிலக்கரி உஷ்ணத்தில் உருக்கி, சுண்ணாம்பின் உதவியினால் சுத்தப்படுத்தி, கடினமான எஃகாக்க அவர்களால் முடியும். அந்த எஃகினாலான பலவித இயந்திரங்களை அவர்கள் செய்யலாம். அவற்றில் பல, பல நூறு மனிதர்களின் பல மாத உழைப்பை ஒரே மணி சாவகாசத்தில் செய்து முடிக்கும் ஆள் விழுங்கி அசுரத்தன்மை வாய்ந்தவையாகவும் இருக்கும் என்பது நாம் அனுபவத்தில் காண்கிறோம். அந்த வகையில், இந்த யந்திரங்களின் உதவியினால் வெகு குறைந்த சாவகாசத்தில், சொல்ப பொருள் செலவில் செய்து முடிக்கக் கூடிய ஏராளமான செய் பொருள்களைச் செய்து மலை மலையாகவும், காடாகவும் குவித்து விடலாம். இந்த இயந்திரங்கள் அல்லது இயந்திரங்களின் மூலம் செய்து குவிக்கக்கூடிய செய்பொருள்கள் பிறநாடுகளில் விற்கப்பட்டு அவற்றிற்குப் பதிலாக உணவுப் பொருள்களையும் இதரதேவைகளையும் செல்வங்களையும் அவர்கள் பெற்று ஆகவேண்டியது அவசியமாகிறது. ஆனால், செய் பொருள்களுக்கு (Manufactured articles) தேவையான மூலப் பொருள்களில் பெரும்பாலும் (Raw materials) பிறநாடுகளிலிருந்தே வந்து தீர வேண்டியதும் உண்மை. உதாரணமாக துணி நெசவுக்கு பருத்தியும், காகிதத் தொழிலுக்கு, கந்தை மரச் சோறு, புல் முதலியனவும், உணவுப் பொருள்களுக்கு, மாவு, சர்க்கரை, தான்யம் முதலியனவும், சோப்புத் தொழிலுக்கு பிண்ணாக்கு எண்ணெய் முதலியனவும், இங்கி

லாந்தில் அதிகம் விளைவனவல்ல. இதிலிருந்து ஆங்கிலேயரின் வியாபார அவசியம் புலனாகும்.

அந்த நிலைமையில், இயந்திரங்களுக்கோ, செய் பொருள்களுக்கோ வியாபாரச் சந்தை கிடைக்காமல் எவ்விதமாகவாவது இடையூறு ஏற்பட்டாலும், மூலப் பொருள்கள் கிடைப்பதற்கு ஹானி வந்தாலும், அங்கே வேலையில்லாத் திண்டாட்டமும், தொழிற்சாலை யடைப்பும், வேலை நிறுத்தமும், பட்டினி ஊர்வலங்களும், கலகங்களும் குழப்பங்களுமே கண்ட சத்ய பலனாகும். அதற்காகவே அவர்களிடம், அபாரமான தேசாபிமானம், ஒற்றுமையுணர்ச்சி, கூட்டுறவு முயற்சி, ராஜதந்திரம், அரசியல் நிபுணத்வம், அபூர்வ யுக்திகள், அவற்றிற்கேற்ற குயுக்தி வாசகங்கள் இயற்கையாக அமைந்து இருக்கின்றன. "தான் சாக மருந்துண்பாரில்லை. தனக்கு மிஞ்சித் தான் தருமம்" என்றபடி, பிரதானமான வியாபாரத்திற்கும் செல்வ விருத்திக்கும் பிறகு தான் மற்ற விஷயங்கள் அவர்கள் மனதில் புகும். புகுந்த போதும் அந்த இரண்டையும் பலப்படுத்தும் போக்கில் வேலை செய்வது தான் நடக்கும். அவற்றை யொட்டியே, அவர்கள் வகுக்கும் திட்டங்களும், நடத்தும் யுத்தங்களும், செய்து கொள்ளும் சமாதானங்களும், பேசும் பேச்சுகளும் ராஜதந்திர நடவடிக்கைகளும், அயல்நாட்டு விவகாரப் போக்கும் அமையும். அவைகளுக்கு இசைந்து தான் காரியப் போக்கும் இருக்கும். இருந்திருக்கிறது. இருக்கிறது. இப்படி பாகுபாடு செய்து பார்த்தால் அவர்கள் போக்கில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. "............சொல்லிலும் இலாபங் கொள்வது வணிகர் இயற்கை" என்றார் பரஞ்சோதியார் தமது திருவிளையாடல் புராணத்தில்!

(இந்த கட்டத்தில் நமது நிலைமையைச் சற்று ஆராய்வதும் சரித்திரப் படிப்பின் சாராம்சப் போக்காகும். 'கன்னலும் தேனும் கனியு மின்பாலும், செந்நெலுங் கதலியும் நல்குமெக்காலும். 'இனிய பொழில்களை நெடிய வயல்கள் கணக்கின்றி உள்ள நாடு அருமையான தாதுக்கள் பலவிதம் பதிந்து கிடக்கும் சுரங்கங்கள் எண்ணிறந்து கிடக்கும் நாடு! மேவு முப்போகம் பொழி நாடு உலகத்தின் பலவித சீதோஷ்ண மண்டல விளைபொருள்களும் கண் காட்சி சாலைபோல் காணக்கூடிய கற்பக நாடு" என்று பழம் பெருமை, புதுப் பெருமை, பேசும் பெருமை இருக்கிறது. அளவின்றி இருந்ததற் கடையாளமாக, கல்வி, அறிவு, கடவுளுணர்ச்சி, வேதாந்த முறை, 'தனக்கு மிஞ்சினதெல்லாம் தருமத்திற்கு" என்று நடைமுறையில் காட்டி, "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருந்து, வானத்தவர்க்கு நல்விருந்தானவர்கள்" ஆன நம் முன்னோரின் சந்ததியாராகி, நம்மில் பலரும் அவ்வானத்தவர்க்கு நல்விருந்தாக வென விழைந்த, இப்போதைய வறுமை நிலைக்கு வழியாகவும் மருந்தாகவும் நினைக்கிறோம். இந்த அளவு கடந்த பழைய செல்வத்தின் பயன் தான், "எங்கள் வீட்டு ரோழி எனக்கே சுகம்" என்று சுகத்தில் விருப்பமுள்ள சோம்பேறிப் போக்கும், ஊக்கக்குறைவும், சோர்வும் என்று தோன்றுகிறது. ஆனால் புத்தியில் மட்டும் குறைவு கிடையாது. அனுஷ்டானம் என்னவென்றால், சிறந்ததான ஆக்கவேலைத் திட்டத்திலும் ஓட்டைகள் கண்டுபிடித்து கூடிய வரையில் குற்றங்கூறி, சந்தேக நோக்கைக் கிளப்பி விட்டு, சிதைத்து விடுவதில அபாரசக்தி வெகுபேரிடம் காண்பது வருந்தத் தக்கது. இது தவிர அனுஷ்டானம் நல்லமுறையில் செய்து பார்ப்பதும்,

நடத்துவதும் சிரமமாக இருக்கிறது. அதனால்தான் பாரதியார், "நெஞ்சி லுரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி, வஞ்சனைகள் சொல்வாரடி கிளியே! வாய்ச்சொல்லில் வீரரடி!—கூட்டத்தில் கூடி நின்று கூவிப் பிதற்றல் அன்றி, நாட்டத்திற் கொள்ளாரடி கிளியே! நலமொன்றும் அறியாரடி!—உப் பென்றும் சீனியென்றும் உள்நாட்டுச் சேலையென்றும், செப்பித் திரிவதல்லால் கிளியே! செய்வ தறியாரடி!" என்று நைந்து உருகுகிறார். இவ்வளவையும் மீறி மிஞ்சிவிட்டால், ஜாதி வேற்றுமை, வகுப்பு வேற்றுமை, "கட்சிச் சண்டைகள் ஏற்பட்டு இந்நாட்டைக் கலக்கி, சூட்சி நிறப்ப வழியறியாது போகும்" நிலைமை யெல்லாம் கிளம்புகின்றன. அன்னாரின் தன்மை, "சகுன நரியைப்போல, மேலே விழுந்து பிடுங்காமல் போதும்" என்று வருந்தி விரும்புமாறு இருக்கிறது.

மேற்கு நாட்டாருடன் பழகி யடைந்த நாகரீகப்பயனாய், புதிய புதிய தேவைகள் பல முளைத்து, அவையும் இன்றியமையாதனவாக வேரூன்றி, அவற்றின் பொருட்டு, தேவையுள்ளதும் இல்லாததுவுமான பல பொருள்களை இறக்குமதி செய்து வருகிறோம். இத் தேவைகள் சமீபமான முற்காலத்தில் கூட இல்லை. அவைகளைச் செய்துகொள்ளும் சௌகரியமும் இருந்தது இல்லை. சீக்கிரத்தில், "ஆதாரம் சக்தியென்றே அருமறைகள் கூறும். யாதானும் தொழில் புரிவோம் யாதுமவள் தொழிலாம்!" என்ற அறிவுபெற்று, "கம்பினர் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு, அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிக வரம் பெறலாம்!" என்ற திடத்துடன் இருந்தால் பராசக்தியின் அருள் பெறலாம். நாட்டிற்குச் செல்வ விருத்தியும் ஏற்படும். வறுமையும் நீங்கும். சென்னையில் காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு சொல்லிய "நான் வறுமையின் விரோதி" என்ற வாக்கு சீக்கிரத்தில் பலிக்கும்.

ஆரம்பத்தில் ஆங்கிலேயர் சொல்ப விவசாயம் செய்தனர். அது லாபமில்லையெனக் கண்டு, கால்நடை யபிவிருத்தியில் முனைந்து, மேய்ச்சல் தரைநிலங்களைப் பெருக்கி, ரோமங்கத்தரித்தல், கம்பளம் தயாரித்தல், கம்பளநூல்நூற்றல், தோல் எடுத்தல் முதலிய தொழில்கள் நடத்தினர். கம்பள நெசவுமட்டும் பிளாண்டர்ஸ் என்ற அக்கரை தேசத்தில் நடந்தது. இதர தேவைப்பொருள்களை வெனிஸ், ரோம், வியன்னா, ப்ளோரன்பர்க், மாஸ்கோ முதலிய ஐரோப்பிய பட்டணச் சந்தைகளுக்கு சென்று வாங்கி வந்த வியாபாரிகள் மூலம் பெற்றனர். இங்கியபட்டு, பருத்தி உடை, மஸ்லின் வாசனைத் திரவியங்களுக்கு மேற்கூறிய சந்தைகளில் மஹத்தான கிராக்கி உண்டு. நவீன காலந்தொடங்கி, கடல் ப்ரயாணப் போக்கில் இந்தியாவுக்கு வந்ததும் இந்த சாமான்களின் தேவையின் பொருட்டே யாகும் என்பது சரித்திரப் பிரசித்தம். இங்குள்ள நெசவின் நேர்த்தியைக்கண்டு ஆச்சரியப்பட்டு சுமார் 17-ம் நூற்றாண்டில் பருத்தி வாங்கிப்போய் நூற்கக்கற்றும் நெய்யக்கற்றும் வந்தார்கள். சுமார் 18-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்கூட அவர்கள் நெய்த துணிகள் ஜமக்காளங்கள் போன்ற முரட்டுத் துணிகளாக இருந்தனவாம். அவற்றையே ஆங்கிலமக்கள் உவப்புடனும் ஒற்றுமையுடனும் அணிந்தார்களாம். பிற நாட்டு மெல்லிய மலிவான துணிகள் போட்டி யிடாதவண்ணம் அவைகளுக்கு கடுமையான இறக்குமதி வரிகள் விதிக்கப்பட்டனவாம். நாளடைவில் விருத்தியடையச் செய்துகொள்ள, அங்கு ஏற்பட்டுவந்த தொழில்

முறைப் புரட்சி உதவிசெய்ததாம். அந்த அபிவிருத்தி முறைக்கு உதவியாக முக்கியமாக நால்வரைச் சரித்திரங்கள் குறிப்பிடும். நூற்றல் நெசவுத் தொழில்கள் சம்பந்தமாக புதிய கருவிகளைக் கண்டு பிடித்தனராம்.

ஆர்க்ரைட் என்பவர் Spinning genny என்ற கருவியையும், ஹார்க்ரீவ்ஸ் என்பவர் Waterframe என்பதையும் க்ராம்ப்டன் என்பார் Mule என்ற உபாயத்தையும் நூற்றல் தொழில் சம்பந்தமாக கண்டு பிடித்தார்களாம். இவற்றிலிருந்து, தண்ணீரின் ஓட்டும் சக்தியைக் கொண்டு வேலை செய்யக்கூடிய Power loom என்ற தறியை கார்ட்ரைட் என்ற நிபுணர் கண்டுபிடித்தாராம். இந்தக் கோஷ்டியில் கீட்ஸ் என்பவரும் சேர்ந்தவராம். ஆராய்ச்சி உழைப்பின் பயனாக தொழில் முறையில் மாறுதல் ஏற்பட்டு நூற்ற நூலும் நெய்த துணிகளும் ஒன்றுக்குப் பத்தாக ஆயின. குடிசையில் நடந்த தொழில்முறை யாறி தொழிற்சாலைமுறை ஆரம்பமாகியது. "வருங்காலத்தில் எதுவும் வலியவரும்!" நீராவி செய்யக்கூடிய அபாரவேலையின் திறமை, வெந்நீர்கெட்டில் மூலமாக ஜேம்ஸ்வாட்ட் என்பவரால் வெளியாக்கப்பட்டது! இரும்பு நிலக்கரி, சுண்ணாம்பு இவைகளைப்பற்றிய அறிவு திடீரென உதயமாகியது. இதற்கு முன்னதாகவே தண்ணீரின் சக்தியை வேண்டி மலை யருவிகளுக்குப் பக்கங்களில் நெசவுத் தொழிற்சாலைகள் ஏற்பட்டுவிட ஆரம்பித்தன. ஆக சுலபமாகவே, அதுவரையில் மரத்தினாலான இயந்திரங்கள் இரும்பினால செய்யப்பட்டன. இந்த இயந்திரங்களை ஓட்டுவதற்கு இரும்பினால் செய்யப்பட்ட நீராவி யந்திரங்கள் வந்தன. தொழில்முறை யந்திரங்களிலிருந்து போக்கு வரவுக்கும் சாதகமாக வண்டியிழுக்கும் இன்ஜின் ஒன்று ஸ்டீவன்ஸன் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டது. அதற்கு ராகெட் (Rocket) என்று பெயர். அதன் பின்னால் வண்டிகள் சேர்க்கப்பட்டு வண்டித்தொடரும் ஆயிற்று. ஆதியில் தண்டவாடங்கள் இல்லாமல் வெறுந்தரையில் ஓடிற்று. இதையே "பேய்பிசாசு என்று பயந்த ஜனங்கள் இங்கிலாந்தில்கூட உண்டு. (நம் நாட்டில் இருந்ததாகச் சொல்லி நம்மவரை நாமே பரிகசிக்கும் தன்மை சிந்தித்துக்கொள்ளத் தக்கது.) நாளடைவில் தண்டவாளங்களில் ஓடுவது ஏற்பட்டதுடன் பல பல இயந்திரங்களும் அவைகளை ஓட்ட எஞ்சின்களும் ஏற்பட்டன. அனுபவத்தின் பேரில் அவைகளிலேயே நாளுக்கு நாள் அபிவிருத்தியும் நூதன சிக்கன அமைப்புகளும் ஏற்படவும் செய்து தற்காலத்திய நிலைமைக்கு வந்திருக்கின்றன. இந்த மாறுதல்கள் ஏற்பட்டு தொழில்முறைகள் திடீரென அபிவிருத்தியான விபரத்திற்குத்தான் "தொழில் புரட்சி" (The Industrial Revolution) என்று பெயர்.

ஓய்வும், ஒழிவும், பணமும், செல்வாக்கும் உள்ள சில கனவான்கள் விவசாய முறைகளிலும் அபிவிருத்தி செய்ய முயன்று பரிசோதனைகள் செய்து அதிலும் மாறுதல் செய்தனராம். ரிச்சர்டு கிராமவெல், டௌன் ஷெண்ட், வால்போல் முதலியவர்கள் இதில் முக்கியமானவர்கள். இதற்கு விவசாயப் புரட்சி என்றும் பெயராம். ஆக இந்தப் புரட்சிகளின் பயனாக சில மாறுதல்கள் தோன்றினவாம். அவை பின்வருவன:—

அதுகாறும் குடிசைத்தொழிலாக இருந்த நூற்றல் நெசவுத் தொழில்கள், பெரிய தொழிற்சாலைகளில் நடைபெற்றன. அத் தொழிற்சாலைகள் இரும்பு நிலக்கரி சுரங்கங்கள் உள்ள பிரதேசங்களில் ஸ்தாபிக்கப் பட்டன.

அவைகள் பெரும்பாலும் மலைப் பிரதேசங்களே என்பது தெளிவாகும். இந்தத் தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் அவசியத்தின் நிமித்தமாக அங்கே போகவேண்டி, கிராமங்களை விட்டு தொழிற்சாலைகளின் சமீபத்தில் குடிபோக அங்கங்கே பெரிய பட்டணங்கள் ஏற்பட்டன. கிராமங்கள் பாழ்த்தன. பட்டணங்கள் பெருகின. அவைகளுக்கு போகவர ஸாதகமாக கெட்டியான சாலைகள், சுங்கச்சாவடிகள் ஏற்பட்டன. வாய்க்கால்கள் வெட்டப்பட்டன. பாலங்கள் போடப்பட்டன. தபால் தந்தி வசதிகள் நிர்ணயிக்கப்பட்டன. கிராமவாசிகள் பலரும், "உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குக்கூட மிஞ்சாது" என்பதை ருஜுப்பித்தவர்களாய், ரொக்கக்கூலி கிடைக்கக்கூடிய பட்டணக் கரைகளுக்குச் செல்லலாகி, "கெட்டுப் பட்டணஞ் சேர்" என்பதையும் அமுலுக்குக் கொண்டுவந்து விட்டனர். அவரவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய இதர பல அம்சங்களும் நகரங்களில் அபிவிருத்தியாகி, ஜனக்கூட்டம் வலுத்தது. இம்முறையில் கிராமங்களில் கொஞ்ச நிலங்கள்மட்டும் உள்ளவர்கள் குறைந்த விலைகளுக்கு மற்றவர்களிடம் விற்றுவிட்டுப் பட்டணங்களை நாடிப் போகத் தொடங்கினர். இம்மாதிரி இயக்கம் நமது தேசத்திலும் இருந்ததென்பதைப் பாழடைந்து கிடப்பது மூலம் அறியலாம். சுமார் 30 வீடுகள் இருந்த ஒரு கிராம அக்ரஹாரத்தில் 10 வீடுகள் கூட சரியாக இருப்பதைக் காண முடியவில்லை. படித்த அறிவாளிகள் உத்யோக, தொழில் முறைகளில் பிற ஊர்களில் சிக்க நேரிட்டு சொந்த ஊரிலுள்ள வீடுகளைப் பாழாக்குகிறார்கள். படிப்பின்மூலம் பிழைக்கவேண்டியவர்கள் அக்ரஹாரவாசிகளான பிராம்மணர்களே யானதால் அது குறிப்பாகத் தெரிகிறது. இதுபோன்ற பாழ்க்கவிட்ட இதரர்களின் உதாரணங்களும் அநேகம் உண்டு. ஆகவே "கெட்டுப் பட்டணம் சேர்" என்ற பழமொழியின் பொய்க்கூற்று உணரப்படும். அறிவாளிகள் ஆதரிக்கவும் மாட்டார்கள். பிரசங்க பூர்வமாகவும் உபதேசக்ரமமாகவும் பட்டணங்களிலிருந்துகொண்டு, படித்துவிட்டுத் திணறும் அறியாதவர்களை 'கிராமத்திற்குப் போங்கள்' என்று சொல்லும் பெரியார்களில் பலரும், காந்தியடிகள்போன்று அனுஷ்டான பூர்வமாக, கிராமங்களில் தாங்கள் முதலில் குடியேறி, தங்களுடைய பென்ஷன்களையும் வரும்படிகளையும் வைத்துக்கொண்டு வசிக்க ஆரம்பிப்பதுதான் கிராமப் புனருத்தாரண வேலைக்கு முதற்படியான வேலையாகும் என்பதை குறிப்பிடவேண்டி வருகிறது.) ஒரு காலத்தில் பொட்டல் நிலங்களாக இருந்த பாகங்கள் தற்போது ஜன நெருக்கம் உள்ளவைகளாக ஆவது நம் நாட்டிலும், இந்தக் குறைந்த அபிவிருத்தி இயந்திர நிலைமையிலேயே உண்டு. ஆனால் பாழ்த்த கிராமங்கள் பலவாகிவிட்டன. உதாரணமாக தற்காலம் பொன்மலை யிருக்குமிடத்தை சுமார் 20 வருஷங்களுக்கு முன்பு பார்த்தவர்கள் உணருவார்கள்.

இந்த தொழில் புரட்சியால் பல நன்மைகள் ஏற்பட்டதாக சரித்திரங்களில் காணப்படும். பட்டண அபிவிருத்திக்கு நல்ல ஹேது ஏற்பட்டது. நிலக்காரர்கள்தான் செல்வாக்குள்ளவர்கள் என்பது மாறி, சொல்ப உழைப்பும் ஊக்கமும் அறிவுமுள்ளவர்கள் வெகு சீக்கிரத்தில் முதலாளிகளாகி செல்வந்தர்களாக சந்தர்ப்பங்கள் நேரிடும். புதிய மேதாவிகள் பல சிக்கனமுறைகளையும் இயந்திர சாதனங்களையும் கண்டுபிடித்து அறிவு விருத்தியாகும். இயந்திரங்களில் செய்யும் சாமான்கள் ஒரே யளவானவையாகவும், உறுதி

யானவைகளாகவும், எந்தவித பரிமாணங்களில் வேண்டுமானாலும், எவ்வளவு அதிகமாக வேண்டியிருந்தாலும் செய்ய முடியும். ஏககாலத்தில் ஒரு தேச மக்கள் பூராவுக்கும் தேவையான சாமான்களை குறைந்த சாவகாசத்தில், குறைவான செலவில் செய்து முடிக்கலாம். இதனால் பிறநாட்டு வியாபாரம் வளரவும், அதற்கான முயற்சியும் வளரச்செய்யும். கப்பல்கட்டும் தொழிலும், போக்குவரத்துச் சாதனங்களைச் செய்யும் சாமான்களபிவிருத்தியும் ஏற்படும். பெரிய தொழிற்சாலைகளில் துண்டுவிழும் சாமான்களைக்கொண்டு பல பல சிறு தொழில்கள் செய்யவும் சௌகரியம் உண்டு. உதாரணமாக மரக் கிடங்குகளில், தட்டுமுட்டு சாமான்கள், விளையாட்டு சாமான்கள் செய்யலாம். நெசவுசாலைகளில் இருக்கும் துணி, நூல் பிசுருகள் வேஸ்ட் என்னும் யந்திரங்கள் துடைக்க உதவுகின்றன. காகிதத் தொழிலுக்கு மூலப்பொருளும் ஆகும். ஜப்பானிலிருந்து வரும் பல விளையாட்டுக் கருவிகளும் இவ்வினத்தைச் சேர்ந்தவைகளே. பெப்பர்மெண்ட், பிஸ்கட்களும் இப்படித்தான் என்பாரும் உளர். இவைகளுக்கு ஆங்கிலத்தில் Bye products industry என்று பெயர். இத்தொழில்கள் அதிகமாக அதிகமாக வேலையில்லாத் திண்டாட்டம் நீங்கும். அரசாங்கத்திற்குத் தொழில்வரி, சுங்கவரி, வருமானவரி முதலியன வர ஹேதுவுண்டு. நாணயச் செலாவணி அதிகமாகி பாங்குகள் லேவாதேவி முறைகள் அபிவிருத்தியாகும். பிறநாடுகளுக்கு வியாபாரத்தின் நிமித்தம் போக்குவரத்தும், அதற்கான சமயோசித புத்தி, அறிவு வளர்ச்சி, நிதானம் முதலியனவும் வளரும். பிரயாணத்தினாலுண்டான பல தேச பழக்க வழக்கங்கள் இயற்கையழகு காட்சிகளைக் கண்டு இன்புறுதல் முதலியன போன்ற வெவ்வேறான நன்மைகளை யடுக்கிக்கொண்டே போகலாம்.

எதிலும் தீமைகளும் உண்டு. அதை யனுசரித்து தீமைகளையும் யோஜிப்பது பயன் தரும். முக்கியமாக சுகாதாரம் சிதைந்து, புதிய புதிய வியாதிகள் ஜன நெருக்கமுள்ள பட்டணங்களின் மூலம் பரவின. தொழிற்சாலைகளிலிருந்து கிளம்பும் கரிப்புகை வாயு மண்டலத்தையே விஷமுள்ளதாக்கி அதனால் சுவாசப் பை சம்பந்தமான பல வியாதிகள் ஜனங்களைப் பற்றிக் கொண்டது. இது காரணமாக இங்கிலாந்தில் கருப்புப் பிரதேசம்—The Black Districts என்ற ஒரு பிரதேசமே யிருப்பது பூகோளங்களிலிருந்து தெரியும். பட்டணங்களில் வேலை கிடைக்கும், ரொக்கக் கூலியை எதிர்பார்க்கலாம் என்று நம்பி கணக்கில்லாத ஜனங்கள் பட்டணங்களில் குவிவதால் ஆள் கூலி போட்டியின்மூலம் குறையத் தொடங்கிவிடும். பெண்களும் குழந்தைகளும் போட்டியிடுவதானாலும் இந்தக் கதிதான். அதற்கும் வழியுண்டு. தவிரவும் அறிவாளிகளின் சூட்சும யுக்திகளினால் இயந்திரங்களே வேலைசெய்யக் கண்டுபிடிக்கப்பட்டு பல தொழிலாளிகளை வெளியேற்றி வேலையில்லாத் திண்டாட்டம் வலுக்குமேயொழிய குறையாது. வெகு நுட்பமானதும் நேர்த்தியானதும் ஆன சாமான்களை செய்வது யந்திரங்களால் சாத்தியப் படாது. அப்பேர்ப்பட்ட தொழிலாளிகளுக்கும் ஆதரவுகள் குறைய நேரிடும். மேலும் இயந்திரங்களுள்ள தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளிகளும் தாங்கள் வாழ்க்கையில் சேர்ந்து காலங்கழிக்கும் இயந்திரப்போக்கு உள்ளவர்களாகி, உணர்ச்சி குன்றியவர்களாகவும் மந்தபுத்தியுள்ளவர்களாகவும் பலர் தம் போக்கில் நடமாடிவர நேர்ந்துவிடுவது சகஜம். உதாரணமாக ஒரு பெரிய தொழிற்சாலையில் குண்டூசியின் தலையை மட்டும் ஒருவன் வாழ்நாள் பூராவும்

செய்து கொண்டிருந்து கழித்தான் என்று வேடிக்கையாகச் சொல்வதுண்டு. தவிரவும் ஸ்விட்சைப் போடுவதும் அமிழ்த்துவதும் மாத்திரம் தான் பூராவும் செய்யும் தொழிலாளிகளை பல வொர்க்ஷாப்புகளில் இப்போதும் காணலாம். மேலும் தொடக்கத்தில் குறிப்பிட்டபடி பொருளாதார மந்தம், வேறு நஷ்டம் இதர தேசங்களின் போட்டி ஏற்படும்போது எவ்வளவு கஷ்டங்கள் ஏற்படலாம்? பணக்காரர்கள் பணக்காரர்களாகவும் ஏழைகள் ஏழைகளாகவுமே இருந்துவிட ஹேது உண்டு. அல்லது முதலாளி திடீரென ஏழையாகப் போய்விடலாம்; தொழிலாளி முதலாளிப் போராட்டம் நாளுக்கு நாள் விருத்தியாகி, வேலை நிறுத்தங்களும், சம்பளப் பிடித்தங்களும், யந்திர உடைப்புகளும், தொழிற்சாலைகளை கொளுத்துதலும், கலகங்களும், குழப்பங்களும் உண்டாகி, சில சமயங்களில் துப்பாக்கிப் பிரயோகங்களும் நேரிடுவதும் சகஜமாகி வருவது அனுபவபூர்வம். தவிரவும் மோட்டார் அரசர், பெட்ரோல் அரசர், செம்பு அரசர், எண்ணெய் அரசர் முதலியவர்கள் இருந்து யந்திர சாதனங்கள் மிகுந்து முற்போக்கான ஐக்கிய நாடுகளில் ஒரே பக்கத்தில் கோடீஸ்வரனும் மறுபக்கத்தில் ஒருவேளை யாகாரத்திற்கும் வழியின்றி வாடும் வறியனும் இருப்பதைக் காணலாம். அங்கேயிருந்து ஒரு வேலையில்லாத கோஷ்டியினர் ஸோவியத் ரஷ்யாவில் சரண் புகுந்ததும் பத்திரிகைகளில் வெளியான விவரங்கள். இந்த ஏழைகளின் கஷ்ட மிகுதியினாலேயே, அவைகளைச் சீக்கிரத்தில் தீர்ப்பதாகச் சொல்லி ஒரு ஹிட்லர் சர்வாதிகாரியானார்! முஸோலினி திமிர்கொண்டு அபிஸீனியாவை அபேஸ்பண்ணி வருகிறார். ஜப்பான் சைனாவை விழுங்க முயலுகிறது. நமது அரசாங்கமும் தன் வியாபார லாபத்தையே பட்டவர்த்தனமாக கவனித்து நடந்து வருகிறது. அதற்கான முறையிலேயே ஒப்பந்தங்கள் செய்கிறார்கள். திட்டங்கள் வகுக்கிறார்கள். நாணயச் செலாவணி போக்கை மாற்றி யமைக்கிறார்கள். சட்டங்களை செய்விக்கிறார்கள். எதிர்ப்பவர்களை யுட்கார்த்தி வைக்கிறார்கள். அவர்களையே பூராவாய் தாங்குபவர்களுக்கு தற்காலிகமாய் வேண்டிய உதவி வரம்புமீறியும் செய்கிறார்கள். ஆக்க வேலைத் திட்டங்களையும் சந்தேக நோக்குக் குள்ளாக்குகிறார்கள். சிதைக்காதபடி சிதையச் செய்கிறார்கள்.

செய்பொருள்கள், இயந்திரங்கள், பலவித சுகபோகங்கள் இவற்றின் சீர்கேடுகளை அமெரிக்க நூல்கள் எடுத்து எழுதும்போது நாம் வாய்பிளந்து படித்து, நமது பழையகால முறைகளைப்பற்றி பெருமைப் படுகிறோம். அதையே கிழவர் சொல்லும்போது, பாய்ந்துவிழுந்து கண்டபடி கண்டனம் செய்கிற அறிஞர்களும் பலர் உண்டு. ஏதாவது சொன்னால், "உலகங்கள் எல்லாம் ஆகாயத்தில் பறக்கும்போது, நாம் மட்டும் நத்தைபோல் ஊர்ந்து கொண்டிருப்பதா?" என்ற கேள்வியும் பிறந்து விடுகிறது. பறக்கக் கற்றுக்கொண்ட தேசங்களின் திமிர்போக்கும் அனுபவமாக இருக்கிறது. அறிவாளிகள் ஆழ்ந்து யோஜித்தால் உண்மை தெளிவாகும்.

(அடுத்து, மத விஷயத்திலும், சமூக அமைப்பிலும் உண்டான கிளர்ச்சிகளும் மாறுதலும் எழுதப்படும். இந்தத் தொடர்ச்சியின் மூலம் சரியான கிராமப் புனருத்தாரண திட்டம் தகுந்த முறையில் வகுக்கப்பட்டால் சரித்திரப்படிப்பும் பிரயோஜன முள்ளதாகக் கருத இடமுண்டாகும்.)

---

# "காலைப் பொழுதினிலே"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

அன்றொருநாள் காலைப் பொழுதினிலே, பால ஸூர்யனின் பொன்னிறக் கிரணங்களினால் நீலவானம் ஒப்புயர்வற்ற அற்புத அழகு பெற்று விளங்கியது. பூவுலகிலுள்ள பொருள்களெல்லாம் பொன் மூலாம் பூசப்பெற்றனவேபோல், புத்தழகு பெற்றுச் சிறந்து விளங்கின. நீலக் கடலரசன், தனது அலைகளாகிய குழந்தைகளின் விசித்திர விளையாட்டுகளைக் கண்டு பெரிதும் மகிழ்ந்துகொண்டிருந்தான். கடற்கரையில் ஓங்கி வளர்ந்திருந்ததொரு உயர்ந்த தென்னை மரத்தின் கிளையிலே, ஒரு பருந்து தனது கூட்டிலிருக்கும் செல்வக் குஞ்சுகளுடன் கொஞ்சிக் குலவிக்கொண்டிருந்தது. நீலக் கடலின் குளிரலைகளைத் தழுவிக் கரையை நோக்கித் தவழ்ந்துவந்த மெல்லிய கள்ளத் தென்றற் காற்று, தென்னை மரக்கிளையில் தனது குஞ்சுகளுடன் கொஞ்சிக்கொண்டிருந்த பருந்தைக் கட்டி யணைத்து விரைந்து சென்று மறைந்தது. இன்னொரு தென்னை மரக் கிளையில் வீற்றிருந்த ஒரு கருங்காகம், என்னவோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பதுபோல் தோன்றியது. அது, தனது சிந்தைக்கினிய செல்வக் காதலியைப் பிரிந்து பெரிதும் ஏங்கியிருந்ததுபோலும்! நீலவானில் தோன்றிய கருமேகம், காதலியைப் பிரிந்து மதி மயங்கியிருந்த அக்காக்கையின் கண்களுக்கு அதன் காதலியின் கருநிறத்தை நினைவூட்டவே, அது மரக்கிளையி லிருந்தவண்ணமே அக்கருமுகிலை முத்தமிடுவதாயிற்று. தனது காதலியென்று எண்ணிக் கருமுகிலை முத்தமிட முயன்று தான் ஏமாந்ததை உணர்ந்த அந்த கருங் காக்கை, மிகுந்த சினமடைந்து தான் அமர்ந்திருந்த தென்னையின் பசுங் கீற்றுகளைப் பலவாறு கொத்திக் கொத்தி அலகு வலியெடுத்தவுடன், காலை இளங் கதிரவனின் பொன்னொளியால் பளபளவென்று ஜொலிக்கும் கடலலைகளை மிகுந்த ஆத்திரத்துடன் விழித்து நோக்கலாயிற்று.

அவ்வேளையிலே, தென்றிசையிலிருந்து பறந்து வந்துகொண்டிருந்த தனது இனத்தினரைக் கண்ட அக்காக்கை, அவ்வினத்தினரைக் கும்பிட்டு விட்டு, மற்றொரு கிளையில் அமர்ந்து உற்சாகமாகப் பாடிக்கொண்டிருந்த சின்னஞ் சிறு குருவி யொன்றை நோக்கிக் கலகலவென்று சிரித்தது. இருந்தாற்போலிருந்து திடீரென்று சிரித்த அக்காக்கைக்குப் பித்துபிடித்துவிட்டதோ என்று எண்ணிய அந்த சின்னஞ்சிறு சிங்காரக் குருவி, அக்காக்கையைப் பரிகசித்துச் சிரித்தவண்ணமே அதனருகில் வந்து அதன் தலைக்குமேலிருந்த ஒரு கிளையில் அமர்ந்துகொண்டு, "கிக்கிக்கீ! காகண்ணா! இருந்தாற் போலிருந்து நீ வானத்தில் எதைப் பார்த்துவிட்டு திடீரென்று சிரித்தாய்! அதோ, தூரத்தில் சிறகடித்துப் பறந்து சென்றுகொண்டிருக்கும் அந்தக் கருப்பர்கள் யார்?"—என்று அந்த காக்கையை வினவியது. அதைக் கேட்ட காக்கை, "எனது அன்பார்ந்த சகோதரியே! அவர்கள்தான், எனது இனத்தி

னர். எனது காதலியைப் பிரிந்து தனித்துத் தவித்து நிற்கும் எனக்கு, நீல வான வீதியிலே தத்தம் காதலிகளுடன் உல்லாஸமாகப் பறந்து செல்லும் எனது இனத்தினரைக் கண்டவுடனே, என்னவோ ஒரு விதமான மகிழ்ச்சி தோன்றியது. அதனாலேயே, திடீரென்று வாய் விட்டுச் சிரித்து விட்டேன். வல்வினைப் பயனால் நான் ஒருவன் மட்டும் இங்கிருந்து வருந்திக்கொண்டிருக்கும்போது—தத்தம் காதலிகளுடன் வான வீதியில் குதூகலமாகப் பறந்து சென்றுகொண்டிருக்கும் எனது இனத்தினரை நோக்கும் போது, அவர்களுக்குக் கிடைத்திருக்கும் பாக்கியத்தை நினைத்து எனது மனத்தில் பொறாமை தோன்றவில்லை; அதற்குப் பதிலாக, அவர்களுக்கேனும் அத்தகைய பாக்கியம் வாய்த்ததே யென்று எனது மனத்தில் மகிழ்ச்சியே மேலோங்கி நிற்கிறது. அம் மகிழ்ச்சிப் பெருக்கினாலேயே, நான் என்னையு மறியாமல் திடீரென்று சிரித்துவிட்டேன்"—என்று பதிலிறுத்தது.

பின்னர், மரகதம் போன்ற பச்சை மேனியையும் பவளம் போன்ற செவ்வாயையும் பெற்றதொரு மோகனப் பசுங்கிளி அங்கு வந்து சேர்ந்து, குருவியின் அருகில் அமர்ந்துகொண்டு அதை நோக்கிப் பின்வருமாறு வினவியது:-

"குருவியக்கா! அதோ அந்த செங்கதிரோன், தனது தங்கக் கிரணங்களை எங்கும் பரப்பி நமது சிந்தைக்கினிய பசுமரங்கள் எல்லாவற்றின்மேலும் தங்க மூலாம் பூசுகிறான் பார்த்தாயா? நமது கண்ணுக்கெட்டியதூரம், எங்கும் பொன்மயமாக விளங்குவதைப் பார்க்கப் பார்க்க நமது மனம எவ்வளவு குதூகலமடைகிறது பார்த்தாயா! எத்தகைய பிரதி பலனையும் எதிர்பாராமல் நம்மையெல்லாம் பெரிதும் மகிழ்வூட்டும் அத் தேவனுக்கு, நாம் என்ன கைம்மாறு செய்ய முடியும்? அற்பப் பறவைகளாகிய நம்மால் அவனுக்கு எத்தகைய கைம்மாறும் செய்ய முடியாவிடினும், அவனது அருட்பெரும் புகழையேனும் நமது வாயார வாழ்த்திப் பாடி மகிழலாமல்லவா? குருவியக்கா! நீ பாட்டில் மிக மிகக் கெட்டிக்காரியல்லவா! உனது கர்ணாமிர்தமான குரலிலே, கதிரவனைப் புகழ்ந்து ஒரு பாட்டு பாடேன் கேட்போம்! என்ன அது? எங்கேயோ அவ்வளவு கவனமாக உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறாயே! அம்மவோ! அவ்வளவு பெரிய அந்த காகக் கூட்டம், எங்கு பறந்து போய்க்கொண்டிருக்கிறது? காகச் சகோதரர்களுக்குள் ஏதேனும் போர் மூண்டுவிட்டதா என்ன? எதற்காக அந்த படையெழுச்சி?"

"நன்றாய்க் கேட்டாய், நீ! காகச் சகோதரர்கள் தான் சமூக ஒற்றுமையில் மிக மிகச் சிறந்தவர்களாயிற்றே! அவர்களுக்குள் எதற்காகப் போர் நேரப் போகிறது? விஷயம் என்னவென்பது, எனக்குங் கூட இன்னும் விளங்கவில்லை. அதைத் தெரிந்துகொள்வதற்காகவே, நானும் காகண்ணாவிடம் வந்திருக்கிறேன்"—என்று கிளிக்குப் பதிலிறுத்த அக்குருவி, காக்கையை நோக்கி—"காகண்ணா! நீ பெரிய வேதாந்தியல்லவா? நடந்த விஷயம் என்னவென்பதை, தயை செய்து எங்களுக்கு விவரமாகச் சொல்ல மாட்டாயா?"—என்று கெஞ்சுங் குரலில் வினவியது.

அதைக் கேட்ட காக்கை, அவற்றை நோக்கிப் பின்வருமாறு கூறியது:-

"எனது அருமை மிகுந்த தோழர்களே! சொல்லுகிறேன், கேளுங்கள்; சிற்சில நாட்களாக, காக சமூகத்தினருள் ஏற்பட்டிருக்கும் விந்தைப் புதுமை

களை இன்னும் நீங்கள் கேள்விப்படவில்லையா என்ன? அதோ அந்த சாலைக் கருகிலே, சென்ற வாரத்திலே, எங்களினத்தினரில் பற்பலர் கூட்டங் கூடிப் பேசியதை நீங்கள் கேள்விப்படவில்லையா என்ன? அந்த கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசியவனை, நீங்கள் சாதாரணமாக எண்ணிக்கொண்டு விடாதீர்கள்! அவன் அறிவிலும் திறமையிலும் உலகானுபவத்திலும் பெரிதும் சிறந்தவனவன், "கற்றறிந்த ஞானி, கடவுளையே நேராவான்"—என்று பெரியோர் சொல்ல நீங்கள் கேட்டதில்லையா? அறிவிலும் அனுபவத்திலும் பெரிதும் சிறந்த ஒருவன், மற்றவர்களோடு சர்வ சாதாரணமாகக் கலந்து பழகிக் கொண்டிருந்தாலும் அவன் தெய்வத்தைப்போல் கருதப்பட்டு மற்றவர்களால் பெரிதும் போற்றப்பட வேண்டியவனல்லவா?

அத்தகைய சீரிய செல்வன் காக சமூகத்தினரின் தலைவனாக முடி சூட்டப்பட்டு ஒருவாரமே ஆயிற்று. அவன், தனது அதிகார வலியினாலோ நய வஞ்சகச் செயல்களினாலோ வேறு எத்தகைய சுய முயற்சிகளினாலோ அந்த முடியைச் சம்பாதித்துக்கொண்டு விடவில்லை. அவன், இரவும் பகலும் இடையறாமல் காக சமூகத்தினருக்குச் செய்துவந்த சுயநலப் பற்றற்ற ஒப்பற்ற சீரிய பேரூழியத்தினாலேயே—பிரதிபலனை எதிர்பாராமல் செய்து கொண்டிருந்த தொண்டின் சிறப்பினாலேயே—சிறிதும் தளராத உழைப்பின் பயனாகவே, மற்ற காகப் பெரியோர்களால் இப்பொழுது மன்னனாக்கப்பட்டிருக்கிறான் எனினும், அப்பதவி அவனுக்குக் கிடைத்தது குறித்து, அவனது மனதில் எத்தகைய செருக்கும் சிறிதளவும் இல்லை; மற்ற எவரையும் தன்னிலும் தாழ்ந்தவராக அவன் தனது மனத்தால் நினைப்பதுமில்லை. அரச பதவியை அடைந்த பின்னரும், அவன் தனது சுக—சௌகரியங்களுக்காக மற்ற எவருடைய உழைப்பையும் எதிர்பார்ப்பதில்லை; அவனுக்கு உதவி புரியவோ ஊழியம் செய்யவோ மற்றவர்கள் தாமாகவே வலிந்து வந்தாலும், அவன் அவற்றை ஏற்றுக் கொள்வதுமில்லை. அரச பதவியினால் அவன் தற்சமயம் பெற்றிருக்கும் சுகானுபவம், முன் செய்து கொண்டிருந்ததைக் காட்டிலும் மும்மடங்கு அதிகப்பட்ட தொண்டேயாம். மற்ற காகம் ஒன்று ஒரு வீதியிலுள்ள குப்பை கூளங்களை அகற்றி சுத்தப்படுத்தினால், அரச பதவியிலுள்ள அவன் மூன்று வீதிகளில் கிடக்கும் குப்பை கூளங்களை அகற்றி சுத்தப்படுத்தவேண்டும். பதவியின் கௌரவத்திற்கு ஏற்ப, அவனது உழைப்பும் மேன்மேலும் பெருகுகிறது. மற்றவர்களைத் தனது விருப்பம்போல் அடக்கியாளக்கூடிய அதிகாரம் தனக்கு இருக்கவேண்டுமென்றேனும், மற்றவர்களைத் தன்னிலும் தாழ்ந்தவர்களாக மதித்து வேலை வாங்க வேண்டுமென்றேனும் அவன் சிறிதும் விரும்புவதில்லை.

அவன் எமது சமூகத்தினரின் தனிப்பெருந் தலைவனாக முடி சூட்டப்பெற்று ஒருவாரம் முடிவதற்கு முன்பே, அவன் செய்திருக்கும் அபாரச் செயல்கள் பெருவியப்பை விளைவிப்பனவாக விளங்குகின்றன. எவ்வளவோ காலமாக எமது சமூகத்தினர் அனுபவித்து வந்து கொண்டிருந்த பலவகைப்பட்ட துன்பங்களையும், அவன் மிகமிக எளிதில் போக்கிவிட்டான். இவ்வளவு காலமாக எங்களுக்குள் தலைவன் ஒருவன் இல்லாதிருந்த காரணத்தினாலே, எங்களிற் சிற்சிலரும் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு உள்ளாக நேர்ந்தது. எத்தகைய வேலையும் செய்யாமல் உண்பதிலும் உறங்குவதிலுமே காலத்தை வீணிற் கழித்துக் கொண்டிருந்த சிலர் எத்தகைய கட்டுப்பாட்டுக்கும் அடங்

காமல் மனம் போனவாறெல்லாம் பலவாறு திரிந்து அலைந்து கொண்டிருந்தனர். அத்தகையோரைக்கூட, சமூகக் கட்டுப்பாட்டுக்கு அடங்கி ஒழுங்காக நடந்து கொள்ளும்படி எங்களது புதமன்னன் செய்து விட்டிருக்கிறான்.

"காகம் உறவு கலந்து உண்ணக் கண்டீர்!"—என்று எங்களைக் குறித்து தவப்பெருஞ் செல்வனாகிய தாயுமானவர்கூட புகழ்ந்து பாடியிருப்பதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கக்கூடும். எங்களது சமூகத்தினருள் எவ்வளவு குறைகள் இருந்தபோதிலும், எங்களுக்குள் இருந்துவரும் சமூக ஒற்றுமையும் எங்கு விருந்து கிடைத்தாலும் தோழர்களெல்லோரையும் ஒருங்கே கூட்டி அவர்களுடன் கூடியிருந்து குளிர்ந்த சிந்தையுடன் விருந்துண்டு களிக்கும் இயல்பும் எங்களது சமூகத்தினருக்கே தனிப்பெருமை அளிக்கக் கூடியனவல்லவா? எங்களுள் சில கொடியவர்கள், தங்களுடைய வரம்பு மீறிய—ஒழுக்கங் கெட்ட—இழி செயல்களினால், அத் தனிப்பெரும் பெருமைக்கும் இழுக்குதேட முயன்றனர். அவர்களது சில்லறை விஷமச் செயல்களையெல்லாம் எமது புதிய மன்னன் மிக எளிதில் அடக்கிச் சீர்திருத்தி விட்டான். இப்பொழுது, எங்களுக்கு "சோற்றுக்குப் பஞ்சமில்லை; போர் இல்லை; துன்பமும் இல்லை." ஒரு தலைவனது ஒழுங்கான சட்ட திட்டங்களுக்கும் கட்டளைகளுக்கும் அடங்கி ஒழுங்காக நடந்துகொள்ளும் வரையில், அவனது பாதுகாப்பி லிருக்கும் குடிகளுக்குக் குறைகள் உண்டாவதும் உண்டோ? ஒரு வருஷகாலத்தில் செய்யும்படியான சமூக சேவையை ஒரே வாரத்திற்குள் செய்திருக்கும் அந்த புது மன்னன், எங்களது சமூகத்தினர் அனைவராலும் மனப்பூர்வமான உண்மைப் போன்புடன் பெரிதும் போற்றப் படக்கூடிய தகுதி உடையவனே யென்பதில் ஐயமும் உண்டோ? அத்தகைய உத்தமத்தலைவனை உண்மையன்புடன் பின்பற்றி எங்களினத்தினரில் பற்பலர் உற்சாகத்துடன் கூட்டமாகப் பறந்துசெல்வது இயல்பேயன்றோ?"

இவ்வாறு அக்காக்கை சொல்லி முடித்தவுடன், பால்போல் வெள்ளை வெளேலென்ற வண்ணமுடையதும் குறுமுறுவல் தவழும் குளிர் முகமுடையதுமான அன்னப் பறவையொன்று, தென்திசையிலிருந்து பறந்துவந்து சேர்ந்தது. அவ்வழகிய அன்னம், மற்றவற்றை நோக்கிப் பின்வருமாறு பேசலுற்றது:—

"சகோதரரே! சகோதரிகளே!! "காலை இளவெயிலில் காண்பதெலாம் இன்பமன்றோ!" நீங்கள் மூவரும் இங்கு கூடிப் பேசிக் கொண்டிருப்பதைத் தூரத்திலிருந்து கண்ட நான், பெரிதும் மகிழ்வடைந்தேன். உங்களது ஆலோசனையில் நானும் பங்கெடுத்துக்கொள்ள விரும்பி, இங்குவந்து சேர்ந்தேன். நீங்கள் மூவரும் எதைக்குறித்து ஆலோசித்துக் கொண்டிருக்கிறீர்களென்பதை எனக்குத் தயைசெய்து தெரிவிக்க மாட்டீர்களா?"

அன்னம் வேண்டிய வண்ணமே, மீண்டும் அந்த செய்திகளை யெல்லாம் காக்கை அதற்கு எடுத்துச் சொல்லியது. அதைக்கேட்ட அன்னம், பெரிதும் மகிழ்ந்து பின்வருமாறு கூறத் தொடங்கியது:—

"ஆமாம்! "மன்னர் அறம் புரிந்தால், வையமெல்லாம் மாண்பு பெறும்"—என்பது உறுதி. நாட்டில் அறநெறிக்கு நேரும் இடையூறுகளை அகற்றி நல்லற நெறியை நிலை நிறுத்துவதற்காகவே அனைத்துயிர்களையும்

காத்தருளும் அருளாளப் பெருமானாகிய திருமாலின் அம்சம்பெற்று மணிமுடி புனைந்து அரியணை அமர்ந்து செங்கையில் செங்கோல்தாங்கி அரசு செலுத்த வேண்டியவர்களான வேந்தர்கள், நாடு முழுவதிலும் நல்லற நெறிகளை ஒழுங்காக வளர்த்துவந்தால் பலவகை நலங்களும் பெருகிச் செழித்தோங்கு மென்பதை விரித்துரைக்கவும் வேண்டுமோ? வேறு எதனாலும் விளைவிக்க முடியாத அரும்பெரும் நன்மைகளை, சமூக ஒற்றுமை ஒன்றே விரைவில் விளைவித்துவிடக்கூடும். அவ் வொற்றுமையினால் பெறக்கூடிய புகழும், தனிப்பெருஞ்சிறப்பு வாய்ந்ததாகும். ஒரு சமூகத்தினருள் ஒற்றுமை குறைந்திருந்து, மற்றவை நிறைந்திருப்பினும் பயனில்லை. ஒரு சமூகத்தினரின் முன்னேற்றத்திற்கும் உயரிய புகழுக்கும் உயிர்போன்றது, ஒற்றுமை ஒன்றே. அத்தகைய ஒற்றுமை காக சமூகத்தினருள் பெரிதும் சிறந்து விளங்குவது குறித்து, நான் பெரிதும் மகிழ்கிறேன். நாடகமேடையே போன்ற இம்மாய உலகிலே, எக்காரணத்தை முன்னிட்டேனும் ஒருவரையொருவா பகைத்து ஒருவருக்கொருவர் துன்பிழைக்க முயல்வது, அனைத்துயிர்களுக்குந் தனிப்பெருந் தந்தையாகிய ஆண்டவனால் மன்னிக்கப்பட முடியாத மகத்தான கொடும்பிழை ஆகும். அவ்வுண்மையை மட்டும் உணர்ந்து நடந்துகொண்டால், இவ்வுலகவாழ்வைக் குறைகூற இடமுண்டோ?"

— இவ்வாறு கூறிய அன்னம் பறந்து சென்றுவிடவே, மற்ற பறவைகள் மூன்றும் தனித்தனியே பிரிந்து சென்றன. அப் பறவைகளின் சம்பாஷணையைத் தமது அற்புதக் கற்பனா சக்தியினால் அழகுபெற அமைத்து, உயர்ந்த அரும்பொருள்களை எளிய முறையில் விளங்கவைத்து, "காலைப் பொழுதினிலே"—என்று தொடங்கும் அழகிய இனிய கவிதையை இயற்றிய கவிஞர்பெருமான் யார்? அவரே செந்தமிழ்த் தாய்க்குப் புதுப்புது அணிகள் பூட்டி மகிழ்ந்த அருட்பெருங் கவிஞராகிய திரு. சி. சுப்பிரமணிய பாரதியாரவர்கள்.

---

# "மணிமேகலை" ஆராய்ச்சி

R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



## 3. சரித்திரப் பகுதி.

### 10. இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்

(212-வது பக்கத் தொடர்ச்சி.)

### (சேரலன் காலம்)

மா சாத்துவான் தான் வஞ்சிக்கு வந்து தங்கிய செய்தியை மணிமேகலையிடம் கூறுமிடத்து, இச் சேரலன் கண்ணகியின் கணவனாகிய கோவலனுக்கு ஒன்பது வழி முறைக்கு முன்னோனாகிய மற்றொரு கோவலனின் நண்பனென்று மொழிதல் காண்க. கோவலனின் கதை நிகழ்ந்ததும் அவன் இறந்ததும், சேரன் செங்குட்டுவனது காலத்திலென்பது நூற்களால் அறியப்படும். இச் கோவலனுக்கு ஒன்பது தலைமுறைகளுக்கு முற்பட்டிருந்ததாகக் கூறப்படும் அக் கோவலனது காலத்தவனாகிய சேரலன், சேரன் செங்குட்டுவனது காலத்திற்குப் பல்லாண்டுகளுக்கு முற்பட்டவனாக இருத்தல் வேண்டுமென்பது பெறப்படும். பதிற்றுப்பத்து, ஐந்தாம்பத்தில் சேரன் செங்குட்டுவனை,

> "வடவருட்கும் வான்றோய் நல்லிசைக்
> குடவர் கோமான் நெடுஞ் சேரலாதனுக்கு"

மகனெக் கூறியுள்ளபடி, 'மணிமேகலை'யிலும் அதன் ஆசிரியர் தாம் குறித்துள்ள சேரலனைக் குடக்கோச்சேரலன், "குட்டுவர் பெருந்தகை" யெனக் கூறுதலால், இருநூற்களும் சேரன் செங்குட்டுவனது தந்தையாகிய நெடுஞ் சேரலனையே குறிப்பனவாகுமோ என்றும் எண்ண இடமுள்ளது.

இந் நூலாசிரியர் தாம் குறித்த சேரனை 'விடர்ச்சிலை பொறித்த வேந்த' னென்று கூறுமாறு (28: 104);

> "ஆரியர் துவன்றிய பேரிசை யிமயந் தென்னங்குமரி யொடாயிடை
> மன்மீக் கூறு நர்மறந்த பக்கடந்தே"

எனப் பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்திலும்;

> "இமயஞ் சூட்டிய வேமவிற் பொறி
> மாண் வினை நெடுந்தேர் வானவன்"

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மாறோகத்து நப்பசலையார் பாடிய புறநானூற்றிலும் (39); "இமயமலையில் சூட்டப்பட்ட காவலா

கிய விற்பொறியையும், மாட்சிமைப்பட்ட தொழில் பொருந்திய நெடிய தேரையு முடைய சேரன்" என்ற அதன் உரையிலும் உள்ள கருத்துக்கள்,

"மாநீர் வேலிக் கடம்பறுத் திமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல்" (காட்சி. 1-3)

"விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" (23: 82)

"விடர்ச்சிலை பொறித்த விறலோன்" (28: 136)

என்ற சிலப்பதிகார அடிகளில் இளங்கோவடிகள் கூறியுள்ள கருத்துக்களோடு ஒத்திருத்தலின், இவ்வடிகள் யாவும் குறிப்பது, இணையற்ற தனது வீரத் தோன்ற, குமரி முதல் இமயகிரி வரையிலும் வென்றுசென்று, அதற்கறிகுறியாகத் தனது இலச்சினையாகிய விற்பொறியை, இமயத்தில் பொறித்திட்ட இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனையே குறிப்பனவாமென்று எண்ண இடமுள்ளது. எனினும் மேலே குறித்தபடி சாத்தனார் கோவலனது ஒன்பதாவது மூதாதையின் நண்பனாகிய சேரலனென்று கூறுதலால், அவர் கூறுவது செங்குட்டுவனது தந்தையோ அன்றிப் பிறனொருவனோவென்று சந்தேகிக்கவும் இடமுள்ளது. அங்ஙனம் கொள்ளின் செங்குட்டுவனது தந்தை இமயம் சென்று வெற்றியுடன் மீண்டவாறே மணிமேகலை கூறும் சேரனும் சென்று விற்பொறி நாட்டி வந்ததாக எண்ணவேண்டும். சரித்திர ஆராய்ச்சியாளர் கவனிக்கவேண்டிய விஷயங்களில் இதுவு மொன்றாகும்.

## இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

இவனைச் செங்குட்டுவனது தந்தையெனக் கருதுவோர், அவனது ஆட்சி வரலாறு முழுவதும், பெரும் பரிசுபெற்று அவனைப் பாடிய குமட்டூர் கண்ணனாரென்ற நல்லிசைத் தமிழ்ப்புலவரது பதிற்றுப்பத்து இரண்டாம் பத்திலும்; மற்றும் அகநானூற்றிலும் (55, 127, 347, 396); புறநானூற்றிலும் (செ. 62; 63; 65;) சிலப்பதிகாரத்திலும் அவனைக் குறித்துக் கூறப்பட்டுள்ளன கண்டுகொள்க. புறநானூற்றில் இவன் பெருஞ் சேரலாதனென்றும் வழங்கப்படுகின்றனன். சோழன் கரிகாலனோடு போர் செய்து புறப்புண் நாணி வடக்கிருந்த சேரனிவ னென்பர். அச் சேரனைக் கழாத்தலையாரென்ற புலவர் புறத்தில் பாடியுள்ளனர். (புறம். 65) வெண்ணியென்ற அப்போரில் தோற்றோடிய சேரனை வெண்ணிக் குயத்தியாரென்ற பெண்மணியாரும் புறத்தில் பாடியுள்ளனர். (66) வடக்கே சென்ற சேரனது செயல் அகநானூற்றிலும் (செ. 55) குறிக்கப்பட்டுள்ளது.

இச் சேரலன் கடலிடைச் சென்று ஆங்கிருந்த தன் பகைவரது கடம்பினையறுத்த செய்தியும், (செ. 127; 347); வடநாடு சென்று வடவேந்தர்களாகிய ஆரியர்களை அடிபணியுமாறு பொருது தாழ்த்தி, சிலரைச் சிறையும் செய்து, இமயத்தில் தனது விற்பொறியையுமிட்டு (செ. 396) மீண்ட செய்தியும்; ஆபரணங்கள் பலவுடன் பொற்பாவை யொன்றும் தனது பகைவரிடமிருந்து பெற்ற வரலாறும் (செ. 127) அகநானூற்றால் விளங்குகின்றன. விற்பொறியை இமயத்தி லிட்டமைபற்றியே இவனது பெயரும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனென்று வழங்கலுற்றது போலும்! பகைவரிடம் பெற்ற

திறைப்பொருள் யாவும் ஒருபுறத்திட்டு இச்சேரன் புறப்புண்ணுக்கு நாணி நாட்டை நீக்கித் துறவுபூண்டு வடக் கிருந்தன னென்பது அகநானூற்றால் பெறப்படுகின்றது. (செ. 127) அக்காலத்தில் இவ்வரசனோடு இன்ப துன்பங்களை உடனிருந்து நுகர்ந்துவந்த நல்லிசைச் சான்றோர் பலராவர். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் தமது தந்தை கரிகாலனோடு பொருத செய்தியொன்றும் கூறினாரில்லை. ஆயின் அவரது நூலில் கோவலனது கதை நிகழ்ந்தகாலம் கரிகாலனது காலமென விளங்குதலால், அவரது தந்தையும் அக்காலத்தவராக இருந்திருத்தல் கூடுமென்பதை ஊகித் தறியலாம். "சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கழாத் தலையார் பாடியதும் (புறம் 62;) "போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரங் கழுத்தன்னதாக உயிர் போகாது கிடந்தானைக் கழாத்தலையார்" பாடியதும் (புறம். 368) ; அவரைப் பரணர் பாடியதுமாக உள்ள (புறம். 63) புறப்பாட்டுகளை நோக்குக.

## 11. சேரன் செங்குட்டுவன்

'மணிமேகலை'யில் சேரன் செங்குட்டுவனது செய்கைகள் பலவும் காணப்படுகின்றன. பிற மன்னர்களின் மாண்பை இவ்வாசிரியர் குறித்துள்ளவாறன்றி, செங்குட்டுவனது வீரத்தை வியந்து ஒழுங்குபட விரிவாக இவர் கூறி யுள்ளதும் காணத் தக்கது. (26: 77-92) செங்குட்டுவனின் முழு வரலாறும், இவனது இளைய சகோதரர் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் மூன்றாவது காண்டம் முழுவதிலுமாகக் கூறப்பட்டுள்ளது. மற்றும், இவனை பாட்டிசைப்புலவர் பரணர் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்திலும் பாடியுள்ளனர். இவ் வாதாரங்களைக்கொண்டு சேரன் செங்குட்டுவனது போர்த்திறனும் குணகுணங்களும் அரசியல் முறையும் தெய்வ வழிபாட்டின் போக்கும் அக்காலத்திய பழக்க வழக்கங்களும் தற்காலத்தில் பளிங்கிற்கண்ட பரிதி முகம்போலத் தெளிவாக அறிய இயலுகின்றன.

செங்குட்டுவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு உறையூர்ச் சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோணையிடம் பிறந்தவன். அடியார்க்கு நல்லாரும் "சேரலாதற்குச் சோழன்மகள் நற்சோணை யீன்ற மக்களிருவருள்" என்று கூறுவது நோக்குக. நீதி தவறாது செங்கோ லோச்சியவன். எங்கும் வெற்றியே கொண்ட வீரன். சோழனோடு முனைந்து நின்ற போர்க்களத்தில் தனது கணவன் நெடுஞ்சேரன் மாண்டிட, நற்சோணை யுத்த முனையில் கணவ னுயிரோடு தன்னுயிரையும் நீத்தனள். (புறம். 63) அவ் வீரச் செயலைப் பாராட்டி, அதற் கறிகுறியாக அன்னைக்கு நடுகல் விடக்கருதி, சேரன் செங்குட்டுவன், கங்கை சென்று அக்கல்லை நறுநீராட்டித் தூய்மைப் படுத்தப் போவான். எதிர்த்து வந்த ஆரியப் பகையரசர்களைப் பொருது வெற்றிபெற்று மீண்டான். இது பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்துப் பதிகத்தில் காணப்படும் வரலாறாகும்.

சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் மனைவியின் வேண்டுகோட் கிணங்கி, அமைச்சரின் மொழிப்படி, பத்தினிக்கடவுளாகிய கண்ணகி தேவியை பிரதிஷ்டை செய்ய இமயத்தினின்றும் கற்கொணருவான் வேண்டியும், தமிழரசரை இகழ்ந்து கூறிய பாலகுமர னெனும் அரசனின் மக்களாகிய கனகன்,

விசயனென்ற ஆரியமன்னரை அடக்கவும் வடநாடு சென்றதாகக் கூறப்பட்டுள்ளது காண்க. இவற்றை விரிவாகச் சிலப்பதிகாரம் வாழ்த்துக்காதையில் "உரைப்பாட்டு மடை" யென்ற தலைப்பின்கீழ் இளங்கோவடிகள் கூறியுள்ளனர். இவன் கண்ணகியின் கோயிலைக் கட்டுதற்குக் கல்லெடுத்து வரவே இமயம் சென்றனனென மணிமேகலையிலும் கூறப்பட்டுள்ளது. (காதை. 26.)

பதிற்றுப்பத்தும், சிலப்பதிகாரமும் கூறும் செய்திகளை ஒப்பிட்டு நோக்குமிடத்து இச் சேரன் இருமுறைகள் வடநாட்டிற்குச் சென்று வந்திருத்தல் வேண்டுமென எண்ண இடமுள்ளது. ஒன்று தாயின் நிமித்தம் நடுகலலை கங்கை நன்னீரில் நனைத்து வரவும், மற்றொன்று கற்பரசி கண்ணகித் தெய்வத்திற்குக் கோயில்கட்ட கல்லெடுத்து வர இமயத்திற்குச் சென்று வந்ததுமாகும். இவ் வடநாட்டு எழுச்சியை இளங்கோ வடிகளும்,

> "கங்கைப் பேர்யாற்றுக் கடும் புனனீத்தம்
> எங்கோ மகளை யாட்டிய வந்நாள்
> ஆரிய மன்ன ரீரைஞ் ஞூற்றுவர்க்கு
> ஒரு நீயாகிய செருவெங் கோலம்
> கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்"

எனக் கூறுதல் காண்க. மணிமேகலையிலும் புகழ்கொண்டு வடநாடு சென்று, இச்சேரன், கங்கையை நாவாயிற் கடந்து, ஆரிய அரசர் படையையும் தன்னை முன் இகழ்ந்த, கனக விசயரின் மௌமுடிமேல் இமயத்தினின்றும் கற்களைக் கொணரச் செய்து அவர்களின் முடிமிசைக் கல்லும் தனதிரு முடிமிசைச் செய்ய பொன் வாகையுஞ் சேர்த்தி வெற்றியொடு மீண்டனனெனக் குறிக்கப்பட்டுள்ளன. (காதை. 26)

## (செங்குட்டுவனின் போர் வகை)

கரியாற்றில் துஞ்சிய காவலன் நெடுங்கிள்ளிக்குப் பின்பு, அவனது மகன் பெருங்கிள்ளி யென்பான் உறையூர் அரச வுரிமையைப் பெற்றனனென்பர். இப் பெருங்கிள்ளி ஆண்டில இளையனாயிருந்தமையின், இவனை யெதிர்த்துப் பகைவர் பலரொருங்குகூடி வந்தனர். செங்குட்டுவன் இதுகண்டு சீற்றங்கொண்டு, இளையனும் தனது மைத்துனனுமாகிய பெருங்கிள்ளிக்குத் துணையாகச் சென்று உறையூரை யடுத்துள்ள நேரிவாயிலில் சோமர் குடிப் பிறந்த ஒன்பது இளவரசர்களை ஒருங்காக வென்று ஓட விட்டனன். (சில. 27: 118-123) இவ் வரலாற்றை பதிற்றுப்பத்து ஐந்தாய பத்தின் பதிகத்திலும் காண்க. இப் பெருநற்கிள்ளியே புறநானூறு கூறும் இராசசூயம் வேட்ட பெருங்கிள்ளி யென்பர். (செ 16) அடியார்க்கு நல்லார் இங்கு குறித்த செங்குட்டுவனின் மைத்துனனை பெருநற்கிள்ளியென் றுள்ளனர். (சில. பக். 32) சிலப்பதிகாரத்து உரைபெறு கட்டுரையில் பெருநற் கிள்ளியெனக் குறித்துள்ளது. சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் "நேரிவாயில்- உறையூர்க்குத் தெற்கில் வாயிலசோர் ஊர்" என்பர். (பக். 73) மற்றுமிச் சேரமன்னன் சோழ பாண்டியர்களைப் பலவிடத்தலும் எதிர்த்துப் போர்

செய்து, கொடுகூர், வியலூர், இடும்பிற் புறமாகிய பலவிடங்களிலும் வெற்றி பெற்றனன். சிலப்பதிகாரம் இப் போர்களை முறையே,

> "சிறுகுர னெய்தல் வியலூ ரெறிந்தபின்
> ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை
> நேரிவாயில் நிலைச்செரு வென்று
> நெடுந்தேர்த் தானையொ டிடும்பிற் புறத்திறுத்துக்
> கொடும்போர் கடந்து" (28: 115-9)

எனக் கூறுதல் நோக்குக. சோழ பாண்டியரை முறியடித்துக் கொங்கர் செங்களத்தில் வெற்றி பெற்றுக் கொடுகூரெறிந்த போரை, சிலப்பதிகாரம் 25-ம் காதையிலும் குறித்திடுதல் காண்க. (152-5.)

## (பழையனை வீழ்த்தியது)

செங்குட்டுவன், மோகூரின் உரிமையாளனும், பாண்டியனின் படைத் தலைவனும் தனது நண்பன் அறுகை சென்ற சோழக் குறுநில மன்னனது பகைவனுமாகிய பழைய னென்பானை யுத்த முனையில் வென்று, அவனது காவன் மரமாகிய வேம்பை வெட்டிச் சாய்த்துப் பலவகையாலும் அவனை அவமதித்தனன். (மதுரைக்காஞ்சி; பதிற். 44; சில: 27: 124-6) பழைய னென்ற பெயரொடு, சோழநாட்டிலுள்ள போரென்னு மூர்க்குத் தலைவனாக மற்றொருவ னிருந்தனனென்பது அகநானூற்றால் விளங்குகின்றது. முன்னவன் பாண்டியனின் படைத்தலைவனாயிருந்தவாறு, பின்னவன் சோழனது சேனபதியாக இருந்தனன். முன்னவன் தலைமை வகித்த மோகூரென்பது பாண்டியநாட்டி லிருந்தவாறு (மதுரைக் காஞ்சி) பின்னவன் தலைமை வகித்து ஆண்டுவந்த நகரமானது காவிரிபாயும் நன்னாட்டின்கணுள்ள தொன்றாக விளங்கியது. (அகம். 326). சோரது படையோடு பொருத பின்னவன், கழுமலப் போரில் பட்டானாகச் சோழன் பெரும் பூட்சென்னி யென்பான் அதுகண்டு சினந்து கணையனென்ற படைத் தலைவன் கீழிருந்த சேரனது படையை வென்று, படைத்தலைவனை யகப்படுத்திக்கொண்டு கழுமலமென்ற நகரையும் கைப்பற்றிக் கொண்டனன். (அகம். 44) இக் கணைய னென்பானே பின்னர், மற்போரொன்றில் தோல்வியுற்று அதற்கு நாணி மறைந்தன னென்பது அகநானூற்றுச் செய்யுளொன்றால் விளங்குகின்றது. (செ. 386) மேலே கூறிய வரலாறுகளால் பழையனென்ற படைத் தலைவர்களிருவரும் வெவ்வேறானவர்க ளென்பது விளங்கும். பழையன் போரைச் சிலப்பதிகாரமும் சிறப்பித்துள்ளது. (சில. 28: 119-21; சில. இறுதிக்கட்டுரை 11-15.)

## (கடற் போர்)

செங்குட்டுவனோடு முரணிக் கடலிடை யிருந்த பகைவர் பலரைக் கடற்படையொடுஞ் சென்று, இவன் கலங்க அடித்தனன். (சிலப்: 25: 119; 30-கட்டுரை) கடற்படை யொன்றை இவன் கொண்டிருந்ததும், கடற்போரில் தேர்ச்சி பெற்றிருந்த படையினை இவன் வாய்க்கப் பெற்றிருந்ததும் இதனால் விளங்கும். இவனது கடல் வெற்றியின் காரணத்தால் இவன் "கடல்

பிறக்கோட்டிய செங்குட்டுவன்'' என்றும் (பதிற்) "சேரமான் கடலோட்டிய வேல் கெழுகுட்டுவன்'' என்றும் (புறம். 369) கூறப்படுவன். பரணர் இச் செங்குட்டுவனது கடற்போரையும், (பதிற். 45, 46, 48; அ. 212) பழைய னிடத்துப் பெற்ற வெற்றியையும் மிகவும் புகழ்ந்து கூறியுள்ளனர். பதிற்றுப் பத்தில் வந்துள்ள,

"கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ'' (46, 48)

என்ற அடிகளை நோக்குக.

மேற்குறித்துள்ள போர்களை இச் சேரன் யாதுபற்றி மேற்கொண்டன னென்பது நன்கு விளங்கவில்லை. இளங்கோவடிகளும் காரணமொன்றும் புகன்றிலர். இங்ஙனமாகப் பல போர்களிலும் வெற்றிபெற வீரக்கழலணிந்த ஒப்பற்ற வீரனிச் சேரனென்பது விளங்கவே, மணிமேகலையிலும் சாத்தனார், "நிலநா டெல்லைதன் மலைநா டென்ன'' பரந்த விசாலமா யிருந்த மாபெரும் நாட்டிற்கு மன்னனாக இருந்தனனென்று சுருங்கக் கூறிக் கருத்துகள் பலவும் அடங்குமாறு வைத்துள்ளனர். பரணரும், இக் கருத்துக்க ளமையவே,

"வடதிசை யெல்லை யிமயமாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
முரசுடைப் பெருஞ் சமந்ததைய வார்ப்பெழச்
சொல் பலநாட்டைத் தொல்கவி னழித்தழ
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவன்''

எனக் கூறுவாராயினர். சோழ பாண்டியர்களிலும் இச் சேரன் சிறந்து விளங்கினனென்பது இளங்கோவடிகளின் வாக்கினால் விளங்கும். (சில. 25: 87-90; 26: 167-71.)





# மாதர் உலகம்

## ஔவையார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

"பெரியாரைத் துணைக்கொள்" என்பது அடுத்த நீதி. இதைப் பற்றி எல்லா அறிஞர்களும் சிறப்பக் கூறி யிருக்கின்றார்கள். அறிவிற் பெரியவர்களை உற்ற துணையாகப் பேணிக் கொள்ளாத எவர்களும் நன்மை பெற மாட்டார்கள். பட்டினத்தடிகளும் "நல்லா ரிணக்கமும் நின் பூசை நேயமும்" என்ற கடவுள் வழிபாட்டுக்கு முன்னதாக நல்லார் இணக்கத்தை அமைத்துப் பாடினார். மக்களாய்ப் பிறந்தோர் இம்மை மறுமை ஆகிய இருமைப்பயன்களையும் எளிதிற் பெறுதற்குப் பெரியார் துணைவலியே சாதனமாகும்.—உருவத்தினாலும், வயதினாலும், செல்வத்தினாலும் உடல் வலியினாலும் பெருத் திருப்பவர்களைப் பெரியார் என்றெண்ணுவதற்கில்லை.

> "நாம் பெரியர் என்னுமதை நாடா திருக்குமவர்
> தாம் பெரியர் என்ற மறை சாற்றிவிடும்—
> நாம் பெரியார் என்பார் சிறியர்."

என்பது ஆன்றோர் அருளியது. தன்னைப் பெரியவன் என உலகம் மதித்தாலும் தனக்கு அவ் வெண்ணம் ஒரு சிறிதும் இல்லாதிருப்பவரே பெரியர் ஆவர் என்பது இதனால் அறியக் கிடக்கின்றது. பூவின் மணம் அதைச் சார்ந்த நாரிலும் காணப்படுவது போல சிறியவர்களும் கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவர்களைத் துணையாகக் கொண்டு ஒழுகுவாராயின் அப் பெருமை இவர்களிடமும் காணப்படும். செல்வர்கள் அச் செல்வத்தால் செருக்கடைய சந்தர்ப்பங்கள் மிகுதியிருப்பது பற்றி அவ்வித அபாயத்திற்குள்ளாகாம லிருக்க வேண்டி பெரியாரைத் தேடிக் கொள்ளுதல் ஏனையோரை விட இன்றியமையாததாகும். படை மிகுதியுமுடைய கௌரவர்கள், அவர்களை விடக் குறைந்த படைகளையுடைய பாண்டவர்களுக்குத் தோல்வியடைந்த நட்டம் தம்மைச் சார்ந்திருந்த பெரியார்களாகிய பீஷ்மர், துரோணர், கிருபர், விதுரர் ஆகியவர்கள் நன்மதியை அவமதித்துத் தள்ளி இகழ்ந்து சிறியார்களாகிய சகுனி, கர்ணன், துச்சாதனன் இவர்கள் ஆலோசனைகளைக் கேட்டு மதித்து நடந்ததேயன்றி வேறுண்டோ? பாண்டவர்கள் பரமபத நாதனாகிய கண்ணனைத் துணைவனாகக் கொண்டதனா லன்றோ, வெற்றி பெற்றனர்? விபீஷணன் பாவச்செய்கைகளையுடைய முன்னோனை விட்டு அறக்கடவுளாகிய தாசரதியைத் துணையாகக் கொண்டதனா லன்றோ உலகம் உள்ளளவும் அழியாப் பெரும் புகழையும் வாழ்வையும் பெற்றான்.

"பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்திரிந்து தோன்றாதாற் றேரிற்
சிறியார் சிறுமையும் தோன்றாதால் நல்ல
பெருமையவைச் சார்ந்து"

என்று நாலடியார் கூறியதும் இந் நீதியைக் குறித்தேயாகும்.

பரசுராமராகிய பெரியாரிடம் சூரிய புத்திரன் வில்வித்தை பயிலச் சென்றான். அவர் பிராமணச் சிறுவர்களுக்கு மட்டில் கற்பிப்ப தென்னும் விரதம் பூண்டவர். ஆதலால் தான் அந்தண வாலிபன் எனப் பொய் மொழி கூறிக் கபடமாக தனுர்வேதங் கற்றுவந்தான். ஒருநாள் ஆசிரியர் மாணாக்கன் தொடையில் தலை வைத்து அயர்ந்து நித்திரை செய்தார். அச் சமையம் ஒரு வண்டு வந்து கர்ணன் தொடையில் துளைத்தது. அதன் வழி உதிரம் கசிந்தது. அதற்காக உடலை அசைத்தாலும் குருவின் நித்திரை பங்கமாகு மென்று பயந்து மன உறுதியுடன் வேதனையைப் பொறுத்துக் கொண்டிருந்தான். இரத்தம் குருவினது மேனியிற்பட அவ் வுணர்ச்சியினால் குரு தூக்கந் தெளிந்து எழுந்து கர்ணன் தொடையிலிருந்து வழியும் குருதியைக் கண்டு அதிசயித்து 'இவன் வேதிய குலத்தவனாயிருப்பின் இரத்தத்தைக் கண்டு அஞ்சாமல் ஒருபோதும் அவ்விதம் மனவுரங் கொண்டிருக்க மாட்டான். அரசர் குலத்தினனாகவே யிருக்க வேண்டு'மெனக் கருதித் தன் தவப்பெருமையால் இவனது பிறப்பினை யுணர்ந்து கடுஞ்சினங் கொண்டு 'நீ பொய் பேசி என் சபதம் கெட வஞ்சித்துத் தனுர்வேதத்தைப் பயின்றாயாதலால்—இக் கலையின் வன்மை நல்ல தருணத்தில் உனக்குப் பயன்படா தொழியக் கடவ' தெனச் சபித் தகற்றினார். அதனாலேயே பாரதப் போரில் அருச்சுனனை வெல்ல மாட்டாதவனாகி யிறந்தான். ஆதலினால் பெரியாரை அடுத்தால் மட்டில் போதாது. அவர்களிடம் உண்மையாய் ஒழுகி அவர்கள் அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமாக வேண்டும். அங்ஙனம் மனமொழி மெய்களால் மாசுபடா தொழுகாவிடில் கர்ணனைப் போல வாழ்விழந்து வருந்த நேரிடும். அது குறித்தே,

"அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்."

என்றருளினர் பெரியார். தமிழ்ப் பேரரசியாராகிய நம் மூதாட்டியார் "அத் துணை சிறந்த துணை வலியை நீ கொள்" என்று கட்டளை போலக் கூறியருளினார். திருக்குறளாசிரியர் அரியவற்று ளெல்லாம் அரிதே என்றதில் பெரியார் போல வஞ்சத்தால் காணப்படுபவர்களை நம்பாமல் உண்மையான சீலர்களை ஆய்ந்து தெளிந்து தமராக் கொள்ளல் மிக மிக அருமையான தெனக் கூறியதாகவும் கொள்ளல் மிகவும் பொருத்த முடையதாகும். பண்டைக் காலத்திலிருந்தே வஞ்சிக்க விழைவோர்க ளெல்லாம் பெரியார் போலக் கோலந் தாங்குவதும் இயல்பாம். ஆதலினால் அரியவற்று ளெல்லாம் அரிதே எனவும், திறனறிந்து தேர்ந்து கொளல் எனவும் பொருள்படக் கூறியுள்ளார். இன்றேல் இராவணனுடைய தவவேடங் கண்டு உண்மைத் துறவி யென எண்ணிப் பிராட்டியார், பர்ணக சாலையில் எழுந்தருளும் என உவந்து கூறி உபசரிப்

பாரா? நீவிர் யார் என அக் கள்ளன் வினவியதற்கு மனதில் சிறிதும் களங்க மின்றி,

> "அனகமா தெய்பட்ர் அடிகள் நம்மலால்
> நினைவுறு தெய்வம் வேறிலாத நெஞ்சினன்
> ஜனகன் மாமகள் பெயர்ஜனகி காகுத்தன்
> மனைவியான் என்றனள் மறுவில் கற்பினள்"

என்று விடையளிப்பாரா? ஆதலின் உண்மைப் பெரியார்களை ஆராய்ந்து கண்டு தெளிந்து அவர்களைச் சேர்ந்து தாமும் உண்மையாய் ஒழுகக் கடவர். இனி "பேதமை யகற்று" என்பதாகும். இந் நீதி "பெரியாரைத் துணைக் கொள்" என்பதற்கு அடுத்தாற்போல் அமைந்திருப்பது மிகப் பொருத்தமாகும். இது பிறவிக்குக் காரணமான அஞ்ஞானத்தை நீ நீக்குவாயாக என்று உணர்த்தியதாகும். பெரியாரைத் துணைக் கொள்வதால் அறிவுடைய மக்கள் பெற வேண்டிய பயன் அஞ்ஞான நீக்கமேயாம். அதற்குப் பயன்படாத எவ் வறிவும் பயனற்றதேயாகும். இது பற்றியே "கற்றதனா லாயபயன் என்கொல் வாலறிவன், நற்றாள் தொழார் எனின்" என்றருளினர். அழிவில்லாத ஆத்மஞானம் என்பது ஒன்று உண்டென்பதும், இந்திய நாட்டின் உரிமைப் பொருள் என்பதையும், அவ்வித மேலான ஞானத்தை யுணர்ந்த மகான்கள் மிகுதியாகத் தோன்றி ஒளி வீசியதும் இந் நாட்டிலென்பதும் சரித்திர பூர்வமான உண்மை. பிறநாடுகள் இலௌகிக ஞானமே பிறவியின் பயன் என எண்ணி வந்த காலத்திலும் பலதிறப்பட்ட உலக அறிவுக ளெல்லாம் அழியக் கூடியவைகள் என்றும் அழியாத மெய்ஞ்ஞானமே மனிதன் முயன்று பெற வேண்டிய செல்வம் என்று கண்டு கொண்டவர்களே நமது மூதாதைகள். இவ்வித மேல் நோக்கும் உணர்ச்சி மனிதப் பிறவிக்கே ஏற்படல் இயல்பு. எல்லா பிராணிகளும் கீழ் நோக்குடையவைகளாகப் பிறப்பிலேயே அமைந்திருக்க மனிதன் ஒருவனே மேல் நோக்கும் இயல்புடையவனாக அமைந்திருக்கும் குறிப்பொன்றே மனிதன் ஞானத்தை யடைவதற் குரியவன் என்பதற்குப் போதிய சான்றாகும். அத்தகைய ஞானச் சுடரை அறிய வொட்டாமல் மறைப்பது ஆசைப் படலமேயாகும். ஆசையாகிய கருந்திரையைக் கிழித்து அகற்றுவது எளிதன்று. அதுவே செயற்கரும் செய்கை. அவ் வுறுதியே ஆண்மை. அம் முயற்சியிற் றேறியவனே புருடன். மற்றவ ரெல்லாம் குருடரேயாவர். இதன் அருமையைப் பற்றிக் கட்டுக் கட்டாக நம் பெரியார் எழுதி வைத்துள்ள நூல்கள் எண்ணில் அடங்குமோ! தமிழ் நாட்டிற் சிறந்த தபோநிதியாகிய தாயுமானவர் கூறியருளிய "கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்" என்ற விருத்தம் ஒன்றே அதன் அருமையை உறைக்கும் உறைகல்லாகும். பின்னும்,

> விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம் சுத்த
> வெயில் மஞ்ச ளென்னவே வேதாகமங்கள்
> மதிக்கும் அதனை மதியார்—அவர்
> மார்க்கந் துன்மார்க்கம்—சன்மார்க்கமோ மானே"

என்பதை நன்குணர வல்லார்க்கு இவ்வுலக வாழ்வும், அதற்காக மேற்கொள்ளும் கணக்கற்ற அவல முயற்சிகளும் கைவிடத் தக்கவைக ளென்பது விளங்

கும். உண்மையை யுணர்வதற்காக உடலைப் போற்றுவது கடனே யன்றி கானல் போன்ற ஆபாச வாழ்வுக்காக உடலைப் பேணி ஒப்பனை செய்வது பேதமை. அதையே அன்னையார் அகற்றும்படி நினைவூட்டுகின்றார். நன்றாக உலகாயதர்களின் உள்ளத்தில் தைக்கும்படி ஒரு பெரியார்,

தரும ராஜன் தறிக்கும் கட்டை—பிரமன்
தைக்கும் ஒன்பது பீற்றற் சட்டை
கிருமிகட் கொருசன்ம குட்டை—காலன்
கிட்டும் போதினி லொட லொட்டை

என அழகாக இவ் வுடலின் சிறுமையைப் பற்றிக் கூறியுள்ளார். ஆசைக் கிடம் கொடுப்பதை மெல்ல மெல்ல மனதை திடத்தினாற் குறைத்து வரப் பழகுவதே மனச்சாந்தியை அடைய முயலும் முதற்படியாகும். ஆசை குறை வதற்காகவே நித்திய ஒழுக்க நியதியையும் சத்துவ உணவையும் விதியாக வரைந்து வைத்தனர் பெரியோர். அருந்தலும் பொருந்தலும் எல்லாப் பிராணி களுக்கும் பொதுவானதே. இதை யுணராதவர்களை நோக்கியும் உணர்ந்தவர் களை நோக்கியும்,

"மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு
கல்லுண்டு மரமும் உண்டு
மனிதரிலும் நீர்வாழும் சாதியுண்டு
அனேககுல மனிதருண்டு
மனிதரிலும் மனிதருண்டு வானவரு
மனிதராய் வருவதுண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வருவதே
யருமை யென வகுத்தார் முன்னோர்."

என்ற செய்யுளும் நிலவி வருகின்றது. ஞானத்தை மனிதன் அறியவிடாமல் மண், பெண், பொன் ஆகிய மூன்றுந்தான் தடுப்பவைகள் என்பதில்லை. பிறர் புகழுக்குரிய விரிந்த கல்வியும் தடை செய்யும்; செல்வமும் தடை செய்யும்; எத் துறையிற் சென்றாலும் அபாயமே. முள்ளைக் களைய முள்ளை யெடுத்து அதனை வீசி யெறிவது போல அஞ்ஞானத்தை நீக்கும் அறிவு நூல்களைக் கற்று ஆசையனைத்தையும் அறக்களைந்தால் அல்லது ஞானம் அடைய முடி யாது.

"ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசையறுமின்கள்"

என்ற அருள் மொழியைக் கூர்ந்து சிந்திக்கின் வேறு பிரமாணம் வேண்டுவதின்று. வடமொழியில் பேதமை ஏற்பதற்குத் தனியான ஒரு பெயர் இல்லாமல் ஞானம் அல்லாதது என்று பொருள்படும்படி அஞ்ஞானம் என்று குறிப்பது மிக்க ஆழமான கருத்தைக் காட்டுகிறது. விவேகத்திற்கு அந்நியமானதற்கும் தனிப் பெயர் ஒன்றின்றி அவிவேகம் என்றும் வழங்கு தல் மரபாயுளது. ஞானம் இன்மையையும் விவேகம் இன்மையையும் வாக் கினால் கூட உச்சரிக்க விரும்பாமல் தான் அஞ்ஞானம் அவிவேகம் என்று

கூறி அவைகள் மீதுள்ள வெறுப்பைக் காட்டுகின்றனரோ என்றும் ஊகிக்க இடம் தருகிறது. குல பிரஷ்டனை வேதியனை அப்பிராமணன் என்பது போல பேதமைக்கும் ஒரு மரியாதை அளித்ததாகவும் கொள்ளலாம். இத்தகைய அஞ்ஞானத்தையே அகற்றும்படி மூதாட்டியார் அருளிச் செய்தார். அஞ்ஞானமானது அறிவும் முயற்சியும் உள்ள மனிதனால் விலக்க முடியாத ஓர் அவயவம் அல்ல; மனதோடு ஒட்டிக் கொண்டிருக்கும் பொருளுமல்ல. விலக்கித் தள்ளக் கூடியதொன்றேயென்பதைக் குறிப்பாலுணர்த்தவே நீதிமாதா பேதமை "அகற்று" என்றமைத்தனர் என்பது கருதத்தக்கது.

அத்வைத வீர கேசரியாகிய சுவாமி விவேகானந்தர், "ஞான மென்பது மனிதனுக்குள்ளேயே போய் சம்பாதிக்க வேண்டிய பொருளல்ல. ஒரு பெரிய பெட்டியிருக்கிறது. அதில் பலவிதமான பழங்கள் இருக்கின்றன. மேலாக வாழைப் பழங்களைப் பரப்பித் துணியால் மூடியிருக்கிறது. அதையெடுத்து விட்டு, அடியில் பார்த்தால் ருசியுள்ள மாம்பழங்களை அடுக்கியிருக்கிறது. அதற்கடியில் பரிமளம் வீசும் அதிக இனிப்புள்ள பலாப் பழங்களைக் கொட்டி வஸ்திரத்தால் மூடியிருக்கிறது. அதற்கும் அடியில் விலையுயர்ந்த சீமை இலந்தைப் பழங்களை நிரப்பி நாணயமான பட்டு வஸ்திரத்தால் மூடியிருக்கிறது. அதற்கும் அடியில் திவ்விய தேஜோமயமான ரத்தினம் இருக்கிறது. இந்த ரத்தினம் தான் ஞானம். இந்த ஞானத்தை மனிதன் அடைய வேண்டுமானால் மனமாகிய பெட்டியைத் திறந்து ஒவ்வொன்றாய்ப் பரிசோதிக்க வேண்டும். ஆதலால் ஞானத்தை அடைய வேண்டியவன் மனதைப் பரிசுத்தமாக்கி அதில் உள்ளவற்றை நன்கு அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். மனிதனுடைய மனமே உலகிலுள்ள பெரிய புத்தகாலயம் அதை ஆழ்ந்து அறிவதைத் தவிர்த்து வீணுக வெளியே யுள்ள புஸ்தகங்களை மட்டில் படித்துப் பயன் என்ன? ஆனால் உபாத்தியாயரும புஸ்தகமும் அஞ்ஞானத்தை அகற்றுவதற்கு ஓர்வித சாதகம் என்பதில் தடையில்லை. அவ்வித சாதகமே முடிவானதல்ல. இவன் சொந்த முயற்சி தான் ஞானத்தை யடைவிக்கும்" என்று அருளிச் செய்துள்ளார். ஆதலால் பேதமையை அகற்றும் வேலை பிறருடைய தல்ல வென்பது பெறப்படுகின்றது. பிறருக் குபதேசிக்க, கோடிக் கணக்கில் மனிதர் அகப்படுவார்கள். நேரில் அநுபவித்துக் கூறுவோர் மிகச் சிலரேயாவர்; அருமையிலும் அருமை. நமது மூதாட்டியார் சுவாநுபவம் பெற்ற மிகச் சிலரில் ஒருவரென்பது வெள்ளிடை மலை அத்தகையார் அருளும் நீதிகளே நாம் தலையாலேற்கத் தக்கவைகள். காசியைப் படத்தில் மட்டில் கண்டு காட்டுவோனை விட அக்காசிமாநகரை நன்கு ஆராய்ந்து நேரில் அறிந்த ஒருவன் சொல்வது எத்துணைச் சிறப்போ அத்துணைச் சிறப்புடையது பேதமை யகற்றிய பெரியார வாய்மொழி. இனிப் "பையலோடிணங்கேல் என்னும் நீதி. நீ சிறு பிள்ளைகளோடு கூடி நட்புக் கொள்ளாதே என்பது பொருள். வயதில் இளைஞர்களா யுள்ளவர்களையே இது சுட்டுவதாகும். வயது முதிர்ந்தவர்களை நோக்கியே இது கூறியதாகும். தமக்கு ஒவ்வாத விளையாட்டுச் சிறுவர்களுடன் பெரியவர்கள் சமமாகப் பழகுவது சிறுமை தருமென்ப துறுதி. இது மிகவும் வெறுக்கத்தக்க விடயம். ஆயினும் இத் துறையில் மானத்தை வானத்தில் பறக்க விட்டு ஈடுபடும் ஒரு சிலரும் இல்லாமல் இல்லை. சீட்டாட்டம், சூதாட்டம், சொக்கட்டான் முதலிய இலாகாக்களில இந்த வரன் முறையே இல்லையென்பது உலகமறிந்ததே.

வயதுக்கும் உள்ளடங்கிய வாலிபருடன் அறுபதாண்டுக்கு மேற்பட்டவர்களையும் சமத்துவ நிலையில் காண்பதரிதல்ல. இவ் வெதிர்கால நிலையைத் தமது முதறிவினால் முற்கூட்டி யறிந்தே இந் நீதியை வழங்கினரோ? என்றும் எண்ண நேருகிறது. அன்றியும் நமது தமிழ் மொழியில் பையல் என்னும் சொல் நன்னடையும், அடக்கமும் பணிவுமுள்ள சிறுவர்களைக் குறிப்பதில்லை. கட்டுக் கடங்காது துஷ்டத் தனமாக நடக்கும் கலிச் சிறுவர்களையே சுட்டிச் சொல்வது வழக்கு. ஆதலினால் அத்தகைய சிறுவர்களுடன் நீ சேராதே என்றுரைத்ததாகவே கொள்ளல் வேண்டும்; வயதுக் குறைவுடன் அறிவுக் குறைவும் உள்ளவர்களுடன் கூடுவது எந்த வயதுடைய நற்குண முடைய சிறுவர்களுக்கும் பெருங் கேடாய் முடியுமாதலின் நல்ல சிறுவர்களை நோக்கிக் கூறியதாகவும் கொள்ளலாம். சிறுவர்க ளெல்லாம் துடுக்கர்க ளென்று கொள்ளுவதற்கும் இடமில்லை. துருவன், பிரகலாதன், மார்க்கண்டன் போன்றவர்கள் சிறுவர்க ளென எண்ணினோர் எவர்? இவர்கள் வயது முதிர்ந்தவர்களும் வணங்கும் பேரறிவுடையவர்களாய்த் திகழ்ந்தனர்; திகழ்கின்றனர். பழம் புண்ணிய முடைய அப் பெரியார்களைப் போல் ஏனையோர்களையும் எண்ணுவதற்கில்லையாதலின் பொதுநோக்காக மூதாட்டியார் "பையலோ டிணங்கேல்" என்னும் நீதியால் துஷ்டப் பிள்ளைகளுடன் கூடி நட்புக் கொள்ளாம லிருக்கும்படி விளங்கக் கூறியருளினார். ஆண்டிற் பெரியராய் அறிவிற் சிறியரா யிருப்பவர்களும் உண்டு. ஆண்டிற் சிறியராய் அறிவிற் பெரியராய்த் திகழ்வோரும் உண்டாதலின் இரு பான்மையோர்களையும் பாகுபாடு செய்து கட்டல் இன்றியமையாததே. ஒருவன் குணத்தை அவன் நண்பனைக் கொண்டு தெளி என்பது ஆங்கில அறிஞர் கூற்றும். ஆதலின் சிறுவர்கள் கொள்ளும் இணக்கத்தின் பான்மைக் கேற்பவே தங்கள் மனமும் பெரும்பாலும் மாறும் என்பதே இதற்குக் காரணம்.



# ஆபுத்திரன் வரலாறு

(பே. ராமாநுஜம்.)

## 8. இந்திரனும் ஆமகனும்.

ஆபுத்திரனது பெயர் பாண்டிய நாட்டிலன்றி மற்றைய நாடுகளிலும் பரவிற்று. ஆங்காங்கு உள்ள குருடரும், முடவரும் அல்லாமல் உழைத்து உண்பதற்குச் சோம்பிய உடல் வலிமையுடைய பிறரும் ஆமகனை யடுத்து வயிறு வளர்க்கலாயினர். அவன் இன்னார் இனியார் என்பதைப் பாராது, அனைவர் பசியையும் நீக்கி வந்தான். முன்பு ஒரு நாள் இரவு ஆமகன் சிலருக்குச் செய்த உதவி மண்ணும் விண்ணும் சிறிதாகுமாறு வளரும் எனக் கூறினேனல்லவா? இப்பொழுது அவன் புகழ் மண்ணுலகம் முழுவதும் பரவியதை அறிந்தோம். இனி விண்ணுலகில் எவ்வாறு படர்ந்துளது என்பதைக் காண்போம். தேவர்கோன் வீற்றிருக்கும் ஆதனத்திற்குப் "பாண்டு கம்பளம்" என்று பெயர். அஃது வெண்மை நிறம் வாய்ந்திருப்பதால் "பாண்டு கம்பளம்" என்ற பெயர் பெற்றது. இந்திரனுக்குத் துன்பம் நேரவிருக்கும் காலத்தில் அவ்வாதனம் அசைதல் வழக்கமாம். ஒருநாள் இந்திரன் பாண்டு கம்பளத்தில் வீற்றிருந்த பொழுது அக்கம்பளம் அசைந்து நடுங்கிற்று. அவ்வளவில் இந்திரனும் நடுக்க முற்றான். தனக்கு நேரவிருக்கும் துன்பம் எத்துணைக் கொடியதாக இருக்குமோ என அஞ்சினான். தீய அசுரர் சூழ்ச்சியோ, துருவாசரைப் போன்ற பொறுமையிழந்த முனிவரின் வெஞ்சினமோ, இனி நிகழவிருப்பது யாதோ என உடல் வியர்த்தான். இதனைக் குறித்து வேறு சிலருடன் சிந்தித்தான். கொடிய அசுரர் பகையும் இல்லை; தூவாசரைப்போன்ற முனிவர்களின் வஞ்சினமும் நிகழ்வதற்கில்லை. மண்ணுலகில ஒருவன் புண்ணிய மிகுதி புரிவதை யறிந்தனர். "தென்னை மரத்தில் தேள் கொட்ட பனைமரத்தில் நெறியேறிற்று" என்பது ஒரு பழமொழி. இங்கு அப்படியும் இல்லை. பூவுலகில் ஒருவன் புண்ணியம் பெருக்கி வாழ்கின்றான். அதனால் தேவர்கோன் அச்சம் அடைகின்றான். என்ன வாழ்வு இந்திரன் வாழ்வு? நல்லவரும் ஆகாது, தீயவரும் ஆகாது என்றால் அவ்வாழ்வில் என்ன பெருமையுளது? அசுரர்கள்தான் இந்திரன் பதவியைக் கவர முயல்வர் எனின் ஒருவன் புண்ணியம் மிகுதி புரியின், அப்புண்ணியமே அவனை அவ்விந்திரன் பதவியிற் கொண்டு சேர்க்கும். அதனால் இந்திரன் தனது பதவியை இழக்கநேரிடும். அமரர்கோனுக்கு இதனினும் கொடிய துன்பம் வேறு யாதுளது? இங்ஙனம் வாழ்பவன் நமது ஆபுத்திரனே-என்பதை நேயர்கள் முன்னரே உணர்ந்திருக்கலாம். பாண்டு கம்பள நடுக்கத்திற்கு ஆபுத்திரனது அறச்செயல்தான் காரணம் என்று அறிந்த அமரர்கள் அவன் மனநிலையை அறிந்தனரில்லை. அச்சத்தால் அறிவு தடுமாறினர் போலும். இனி ஆபுத்திரனது அறச்செயலைத் தடைசெய்வதற்கு அமரர்களொடு கலந்து இந்திரன் ஓர் சூழ்ச்சி செய்யத் தலைப்பட்டான். மண்ணுல

நிற் பரவி வளர்ந்த ஆபுத்திரன் புகழ் இப்பொழுது விண்ணுலகில் பரவிய புதுமையை அறிந்தோ மல்லவா?

மதுரை நகரிலே, சிந்தாதேவியின் அம்பலத்திலே, அப்பெருமாட்டி யளித்த தெய்வத் திருக்கலத்தோடு, ஏழைமக்களின் இடையே ஆபுத்திரன் திருவோலக்கம் கொண்டிருக்கின்றான். அவன் முன்னர் வளைந்த முதுகும் குழிந்த கண்களும் ஒட்டிய கன்னமும் உடைய ஓர் கிழவேதியன் தளர்நடை யுடன் வந்து அடைந்தான். "ஐயரே, வருக, வருக; தங்கள் திருவடி வருந்த இங்கு வந்து எளியேனுக்குக் காட்சி தந்தமையால் அடியேன் புனிதனானேன். இவ் வேழையை ஒரு பொருளாக மதித்து இங்கு எழுந்தருளினமை யாது காரணமோ?" என்று பணிவோடு வினவினான் ஆமகன். பார்ப்பனர் அனைவரும் "ஆ கவர் கள்வன்" என்று இகழ்ந்து, உண்ணும் கடிஞையில் மண் இட்ட செயலை இவன் அன்றே மறந்தானாயினும், "அவர்கள் தன்பால் பெறக்கூடிய பொருள் யாது உளது? உணவு ஏற்பதில்லையே" என்ற ஐயத்தால்தான் அவன் அவ்வேதியர் வருகைக்குக் காரணம் வினவினான். "மைந்தனே, வாழ்க பல்லாண்டு; நினது உயர்ந்த செய்கையே என்னை உன்பால் கொணர்வித்தது. இறைவன் என்னைச் சிறிது நல்ல நிலைமையிலேயே வைத்திருக்கின்றான். இம்முதுமையும் யானே தேடிக்கொண்டது. நினது உயர்ந்த குணமும், அறச்செயலும் கேட்டு மகிழ்ந்த யான் நீ விரும்பின் ஏதாவது அளித்துப்போக லாம் என்று வந்தேன்" என்றான் அம்மறையவன்.

"பெரியீர், தங்கள் பேரன்பிற்கு வணக்கம்; உலக அன்னை உவந்து அளித்த இத்தெய்வத் திருக்கலம் ஒன்று போதும்; இவ்வுலகு மகிழ்வதற்கு உரிய பொருள் வேறு யாதுளது?"

"இவ்வுலகு மட்டுமா மகிழ்கின்றது? நின் புண்ணியச் செயலை யறிந்து மேல் உலகும் பெருமகிழ்வு அடைந்துளது. அஃதிருக்கட்டும்; நீ புரிந்த அறச்செயலின் விழுப்பயனை அநுபவித்தல் வேண்டாமா? பிறர் களிப்போடு வாழ்கின்றன ரென்றால், நீ அவ்வின்பமும் மகிழ்வும் பெற வேண்டாவோ?"

"அன்புடையீர், இன்பமும் மகிழ்வும் என்பால் இல்லையென்று நினைக் கின்றீர்கள்? இதோ, பாருங்கள். எத்தனைப் பெயர்கள் பசியொழிந்து துயர் மறந்து மலர்ந்த முகத்துடன் வீற்றிருக்கின்றனர்! இங்ஙனம் இவர்கள் செம் மாந்து வீற்றிருப்பதைக் கண்டு என் உளம் அளவிறந்த மகிழ்ச்சி யடைகிறது. இதனினும் சிறந்த இன்பம் அளிப்பது வேறொன்று இருப்பதாக அடியேன் நினைக்கவில்லை"

"நீ கூறுவது உண்மைதான்; ஆனால், விண்ணுலகம் என்று கேட்டிருப் பாயே, அங்கு வாழும் அமரர்களின் நிலைமையை அறிவையா? என்ன அவர் களின் இன்பவாழ்வு! ஒருவனுக்கு முதுமைப் பருவம்போலத் துன்பம் தருவது வேறொன்று இல்லை. எவ்வளவு செல்வம் இருப்பினும், அதனில் ஒரு சிறிதாவது அநுபவிக்கும்பேறு முதுமைக்கு இல்லை. அவன் சொல்லை அவனுடைய சொந்த உறுப்புக்களே கேட்டு நடவா. கால் ஓர் இடத்திற்குச் செல்ல இயலாது தடுமாற்றம் அடையும்; கை ஒரு பொருளை எடுக்க முயலும் பொழுதே நடுக்கமுறும்; உடலை வளர்ப்பதற்கு உரிய உணவை யேற்றுக் கொள்ள அவன் வயிறு மறுக்கும். கண்களும் செவிகளும் தம் தொழிலை

மறக்கும். என்ன கொடுமை! அவன் உறுப்புக்களே அவனுக்குக் கீழ்படியா விடின், வேறு எவர் அவனை மதிப்பர்? பிணிகள் அனைத்தும் எமது எமது என்று தேடிவரும் பருவம் அம்முதுமைப் பருவமேயாகும். அந்தோ! அதுபொழுது ஒரு சிறு நோவுவரினும் அது மலைபோலத் தோன்றி வருத்தும்! அதுவுமன்றி, என்ன அருவருப்பு; அவர்களைக் கண்ணால் பார்க்கவும் மற்றைய பருவத்தினர்க்குச் சகியாது" இங்ஙனம் அம்மறையவன் கூறிக் கொண்டே இருக்கையில் ஆபுத்திரனுக்குத் தன்னை யறியாது நகைப்பு வந்தது. இவரே முதியவராக இருந்துகொண்டு அப்பருவத்தின் இழிவைக் கூறுகின்றாரே என்பது அவன் சிரிப்பிற்குக் காரணமாகலாம்.

"அன்பனே, நினது நகைப்பின் காரணம் அறிவேன். யானே எனது நிலைமையைப் பழித்துப் பேசுகிறேன் என்பதுதான் அது! இம்முதுமையை நானே வருவித்துக் கொண்டது என முன்பு கூறினதை நீ மறந்திருக்க மாட்டாய். விரும்பின் இசகிழப்பருவத்தை விடுத்து, நல்ல காளைப் பருவம் அடைய என்னால் முடியும். யான் இப்பொழுது கூறியதிலிருந்து முதுமையின் கொடுமையை அறிந்திருப்பாய். இம்முதுமை நினக்கு வராது இருக்க விருப்பம் இல்லையா? விண்ணுலகில் வாழ்கின்றார்களே தேவர்கள், அவர்களுக்கு இத்தகைய துன்பம் இல்லை; முதுமையென்பதே கிடையாது"

ஆபுத்திரன் முன்னையிலும் அதிகமாக நகைத்தான். அவ்விண்ணவர் வாழ்க்கையை அவன் முன்னமேயே நன்கு அறிந்திருக்கின்றா னல்லவா?

"என்னால் உனக்கு விண்ணுலக வாழ்வு கொடுக்க வியலாதென்று நகைக்கின்றாய்? என்னை இன்னார் என நீ அறிந்திருப்பின் உனக்கு இவ்வையம் நிகழாது. அவ் விண்ணுலகை ஆட்சி புரிபவன் நான்தான்; இந்திரன் எனப்படுவேன்"

"ஐய, தங்கட்கு மீண்டும் ஒருமுறை வணக்கம். அமரவாழ்வு அடியேற்கு அளிக்கத் தங்களால் இயலாது என்பது எனது கருத்தன்று. முதுமையன்றி இளமைப் பருவமே பெற்றிருப்பினும் அவர்கட்கு மட்டும் துன்பம் இல்லையா? அவர்கள் துய்க்கும் இன்பம் என்றும் அழியாது நிலைபெற்று இருப்பதல்லவே. அவனவன் தத்தம் நலத்தைப் பெரிதென்று கருதி வாழ முயல்வதினும், எல்லாரும் இன்புற்று இருக்க முயல்வதுவே மிகச் சிறந்ததாகும். இத்தகைய துறையில் ஈடுபட்ட உத்தமர்கள் மிகப் பலராவர். இவ்வருஞ்செயல் தங்கள் நாட்டவர்க்குப் புதுமையேயாகும். என்றும் அழியாத இன்பத்தை நல்கும் இறைவன் திருவடி நீழலை அடைய விரும்பி, அவன் திருவருளையே அல்லும் பகலும் நினைந்து வாழும் துறவிகளைத் தன்னிடத்தே பெற்ற பெருமை வாய்ந்தது இப்பூவுலகு ஒன்றே! இங்ஙனம் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராகிய பெரியாரும், பேரின்பத்தை விழைந்து முயலும் துறவிகளும், இன்னோரன்ன பிற சீரியரும் இல்லாத தேவர் நன்னாட்டிற்கு இறைவனாகிய வல்லமை மிக்க அரசே! பசியால் மெலிந்தோரின் அரிய பசியைத் தீர்த்து, அவர்களின் மகிழ்ச்சி நிறைந்த இனிய முகத்தைக் காட்டுகின்ற தெய்வத்திருக்கலம் என்பால் இருக்க, என் விருப்பிற்கு உரிய வேறு ஒரு பொருளும் உளதோ? ஐய! நீ எனக்கு அன்புடன் அளிக்க விரும்புவன யாவை? உண்டியா, உடையா? பெண்டிரா, பிறரா?" என்று கூறி நகைத்தான்.

அவன் நகைப்பு வாசவன் மனதை வருத்தியது. "நாம் இவனைப் பாராட்டிப்பேசி, வேண்டியன பெற்றுக்கொள் என்று நாமே முற்பட்டு வந்து கூறினமையாலன்றோ இச்சிறுவனுக்கு இவ்வளவு செருக்கு உண்டாயிற்று? இவன் கையகத்து இருக்கும் இந்த அற்பக் கடிஞையைப் பெரிதென்று மயங்கி என் வலிமையையும் பெருமையையும் அறியாது இகழ்ந்தான். இனி இவன் பெற்றிருக்கும் கலம் பயன்படும் வகையும், அதனால் இவன் அறிவு தடுமாறிச் செம்மாந்து இருக்கும் நிலையும் எத்துணை நாட்கள் நிலைத்து நிற்கப் போகின்றன?" என்பனபோன்ற அளவிறந்த எண்ணங்கள் அவ்வேதிய விருத்தன் நெஞ்சில் உதித்தன. "சிறியோய்! என்னை நீ இன்னவன் என்று அறிந்திருந்தும் மதியாது பரிகசித்தாய்; இதன் பயனை விரைவிற் காண்பாய்" என்று வஞ்சினம் கூறிச் சென்றான் மறையவர் கிழவனாக மாயவேடம்பூண்ட வானவர் தலைவன்.

## 9. செல்வச் செருக்கு

ஒரு நாள் பிற்பகலில் மதுரையம்பதியை அடுத்துள்ள ஓர் சிற்றூரில் ஒருவன் "உண்போர் எவரேனும் உளரோ? உண்போர் எவரேனும் உளரோ?" என்று தெருத்தெருவாய்க் கூவிச் சென்றான். அவ்வூரார் அனைவரும் அவனைப் பித்தன் என்று இகழ்ந்து பரிகசித்தனர். அதற்கு ஏற்ப சிறுவரும் சிறுமிகளும் அவனைச் சூழ்ந்து சிறு கல்லையும் மண்ணையும் அவன்மீது எறிந்து கைகொட்டி நகைத்தனர். அவன் மனம் வருந்தி அவ்வூரினின்றும் நீங்கி வேறொரு கிராமத்தை யடைந்தான். அங்கும் "உண்போர் எவரேனும் உளரோ!" என்று கூவினான். என்ன புதுமை! அவ்வூராரும் முன்னைய கிராமத்தாரைப் போன்றே பரிகசித்து வெருட்டினர். இதற்குள் அவனை இன்னவனென்று அன்பர்கள் உணர்ந்திருக்கலாம். நம் வரலாற்றுத் தலைவன் ஆபுத்திரனே அவன். இந்திரன் வஞ்சினம் பலித்தது. பல வருடம் மழையின்றி வருந்திய பாண்டிய நாடு இதுபொழுது இந்திரன் ஆணையால் மழை வளம் பெருகி உணவுப் பஞ்சம் ஒழிந்தது. மழையின்றிக் காய்ந்த அக்காலத்து மக்கள் அனைவரும் "பசி பசி" யென்று கதறினர். அதுபொழுது அறக்கூழ்ச்சாலையும், பிறவும் செல்வர்கள் பலர் நிறுவினர். எனினும் ஏழைகள் அனைவரும் வயிறு நிறைய உண்பதற்கில்லை. அது சமயந்தான் ஆபுத்திரன் தெய்வத்திருக்கலம் பெற்று பசி யென்னும் சொல்லை அனைவரும் மறக்குமாறு செய்துவந்தான். அதன் பின்னர் அவன் புரிந்த அறச்செயல் வளர்ந்ததும், இந்திரன் வந்ததும், சென்றதும் அறிந்துளோம். சென்ற வாசவன் பாண்டிய நாட்டில் நீர்வளம் பெருக மழை பெய்யும்படி மேகங்களுக்கு ஆணையிட்டான்.

"பாண்டியன் சீமையிலே பரவின மேகமெல்லாம்
குமுறியிடித்துக் குடங்கொண்டு பொழிவதுபோல்
சோனா மழையாகச் சொரிந்தன பூமியெங்கும்
நல்ல மழையாலே நாடு செழித்ததுவே
பூமி குளிர்ந்ததுவே பொய்கைகள் நிரம்பியன
ஏரி குளம் நிரம்பிப் புரளுதே வெள்ளமெங்கும்
உலர்ந்த மரங்களெல்லாம் உயிருண்டாய்த் தளிர்த்தனவே

செடிகள் கொடிகளெல்லாம் பூத்துச் சொரிந்தனவே
காயா மரங்களெல்லாம் காய்த்துப் பழுத்தனவே
வாழை வடக்கீனும் வான்கமுகு தெற்கீனும்
ஏர்கட்டி உழுவார்கள் இளைநாற்று நடுவார்கள்
கரும்பும் இளநீரும் கண்திறந்து மடைபாயும்
செந்நெல் விளைந்தனவே செழிப்பான பூமியெங்கும்
கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெல்காணும்
அரிதாள் அறுத்துவர மறுதாள் பயிராகும்
அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடுகட்டும்
யானைகட்டும் தூருகும் வானமுட்டும் போராகும்
மாடுகட்டி போரடித்தால் மாளாது செந்நெலென்று
யானைகட்டிப் போரடிக்கும் வளப்பம் நிறைந்ததுவே.''

அதனால் பாண்டிய நாட்டில் பசித்துயர் ஒழிந்தது. ''சினங் கொண்டு சென்ற வாசவன் ஆமகனுக்கு எத்தகைய தீங்கு செய்வனே? அச்செய்கையால் நாடு என்ன கேடு எய்துமோ!'' என்று ஐயுற்று அஞ்சிய நமக்கு இச்செயல் வியப்பு விளைவிப்ப தொன்றல்லவா! எனினும் இதனால் நாம் ஓர் உண்மை அறிவதற்கு உளது. நல்லவர் என்று போற்றப்படுபவரைத் துன்புறுத்தவோ, கெடுக்கவோ பிறரால் இயலாதென்பதும்; கெடுக்க முயலின் அம்முயற்சியும் நன்மையாகவே முடியுமென்பதும் இந்நிகழ்ச்சியால் பெறப்படுகின்றது. அரிச்சந்திரன் வாய்மையைக் கௌசிக முனிவரும், நளனுடைய செம்மையைச் சனிபகவானும் கெடுப்பதற்குச் செய்த முயற்சியே, அவர்கள் விருப்பிற்கு மாறாக முன்னவன் வாய்மையையும், பின்னவன் சீர்மையையும் உலகு அறியச் செய்வதற்கு ஏதுவாயிற்று. இங்கு வாசவன் ஆபுத்திரன் அறச்செயலைக் கெடுக்க முயன்ற சூழ்ச்சி அனைவர்க்கும் நன்மை பயப்பதாகவே முடிந்தது.

''நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.''

என்ற தமிழ் மூதாட்டியார் இவ்வாபுத்திரன் வரலாற்றை மனத்துட் கொண்டு தான் கூறியிருப்பர்போலும். இந்திரன் செயலால் எவர்க்கும் துன்பமில்லையெனினும் ஆபுத்திரன் நிலைமையையும் அவ்வாறு நினைக்கலாமா? அவன் மனம் நொந்து, உடல் மெலிந்து ஊர் ஊராக அலைந்து திரிகின்றான். அவன் பெற்றுள்ள அருங்கலம் மறைந்தோ, அழிந்தோ போகவில்லை; அல்லது அக்கலம் அவன் பசிக்கு உணவு கொடுக்க மறுக்கவுமில்லை. அங்ஙனம் இருந்தும் அவன் துன்புறுவதற்கு நேர்ந்த காரணம் அவன் தன்னலம் மறந்து வாழ்வது தான். தொட்டனைத்து ஊறும் மணற்கேணிபோல எடுக்குந்தோறும் வளரும் அப்போனக அருங்கலம் தன் பொருட்டு வைத்திருப்பது அவன் மனதிற்கு ஒவ்வவில்லை. மழை வளம் பெருகவே முன்புபோல் பலரும் ஆமகன் பால் உணவு ஏற்கவரவில்லை. அவன் சிந்தாதேவியின் அம்பலம் நீங்கி, மதுரை நகரின் ஒவ்வோரிடத்தும் உண்போரைத் தேடியலைந்தான். என்ன

பேதமை! முன்பு அவனால் உணவு அளிக்க உயிர் பிழைத்த பலரும் அவனை மதியாது இகழ்ந்தனர். இதுதான் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் உள்ள வேற்றுமை. நல்ல குணம் உடையவராயின் அதுபொழுது உள்ள நிலைமையைக் கூறி, அவன்பால் உணவு ஏற்கப் பணிவோடு மறுத்திருக்கலாம். செருக்கால் அறிவிழந்த அவர்கள் மறுத்ததோடு இகழவும் தலைப்பட்டனர். இதனால் அவன் மதுரை நீங்கிச் சிற்றூர் பலவற்றிலும் உண்போரைத் தேடினான். அங்கும் மதுரை நகரில் கண்ட காட்சியே கண்டான். என் செய்வான் ஆமகன்! "கலைமகள் நிலையத்திற்கு முன்னுள்ள அம்பலத்தில் குருடரும், முடவரும், பிணியாளரும் நிறைந்திருந்தனரே, அவர்களை மட்டுமாவது உண்பிப்போம்" என்று கருதி அவன் சிற்றூரின் நீங்கி அவ்வம்பலம் அடைந்தான். அங்கே அவன் கண்டகாட்சி அவன் மனதிற்கு "வெந்த புண்ணில் வேலிட்டதுபோல்" இருந்தது. வலிமையற்ற மக்களும், விலங்குகளும், பறவைகளும் அங்கே காணப்படவில்லை. அவர்கள் உண்பதால் எழும் இனிய ஒலியும் இல்லை. அதற்கு மாறாக தீய நடக்கையினையுடைய காமுகரும், வஞ்சகரும், பிறரும் ஆங்கே நிறைந்திருந்தனர். உண்டை யுருட்டலும், சூதாடலும், வம்பு பேசலும் ஆகிய மறச்செயல்கள் அவ்வம்பலத்தே மிக்கிருந்தன. சிறிது காலத்திற்கு முன்பு, அவ்வம்பலத்தில் ஏழை மக்களின் இடையில், அவர்கள் அரும்பசி களைந்து பெருமிதத்தோடு வீற்றிருந்த ஆபுத்திரனுக்கு இக்காட்சி அளவிறந்த துயரம் ஊட்டியது. இன்னது செய்வது என்று அறியானாகி, அம்பலம் நீங்கி, மீண்டும் மதுரையம்பதியின் நீண்ட தெருக்களில் உண்போரைத் தேடித் திரிந்தான். ஒருவராவது அவனிடம் உணவு வேண்டிவரவில்லை.

> "பெறற்கு அரும்பொருளைப் பெருங்கடல் வீழ்த்து
> ஒருதனி வரும் நரபதி போலத்
> தன்னந்தனியே இன்னல் மிகவு உழன்று
> மதுரை நகரின் பெருந்தெரு ஒன்றில்
> கண்ணீர் வடியக் கால்நடை தளர"

வந்துகொண்டிருந்தான். (தொடரும்.)



# வையை யாறு

(மதுரை-எல். ஆர். ராதாகிருஷ்ணன்.)

வெண்டிரை விரிபுனல் முப்புறஞ் சூழ்ந்த
பண்டை நன்னாடு புகழுட னாண்ட
அமிழ்தினு மினிய தமிழ் மூவேந்தர்,
குறுநில மன்னர்தம் திறைக்கடன் கொள்ள
காலங் கிட்டாக் கலைபயில் வேந்திடைத் 5.

தலை நிமிர்த்தேகும் புலவர் குழாமென
பெருவரை யிழிதரு பல்மா நகர்வழி
நெடுவிசை யுடனே நடுபடை முழக்கின்
பல்வகை யொலியுடன் கல்லெடு பாலத்தின்
வழுக்குமென் பாசிமீது ஒழுகு மதுவெனவே 10.

விரிபுனற் பரப்புமிசை யருவியென வீழ்ந்து,
அலகில்பெரு வொளியுட னுலகில்வி ளங்கிய
முதலிடை கடையெனு முத்தமிழ்ச் சங்கம்
மறுவென்ப தின்றி நிறுவப் பெற்றதம்,
அங்கயற் கண்ணியி னரும்பெருங் கோயில், 15.

திருவிளைஞ் சூழ்ந்த திருமலை யரண்மனை,
தங்க நிழலுடை மங்கம சாலைகள்,
இன்னும் பலவித மன்னும் வளனுடை
கண்ணுக்கினிய தண்ணளி காட்சிகள் 20.

எண்ணிறந்தனவை யுண்ணிறைந்தனவாம்,
சதுர் மறையோரும் சாதாரணரும்
முதுமை யின்றிவாழ் மதுரை மாநகர்
இருபுடை யுடைய கற்பெரும் பாலத்துப்
பதின்பெருங் கண்க ளெதிர் நுழைந்தோடி, 25.

நகர்க் குறுமக்கள் இகல் மொய்ம்புடனே
நீர் விளையாடு நெடுந்துறை வழியே
விரைவுடன் சென்று, மரையிலை வளர்தரு
கயங்களை நிரப்பி மயன்தரு விலவர்
திகைமண் டபம்வழி யொழுகிச் சென்றும், 30.

பன்னகர் வழியாய் மாக்கட லேக்கும்
ஓயா வொலியுடன் பாயா நின்ற
வையை யாறு, வைசா கத்தில்
விழுந்ததுளி யந்தரத் தேனின்று வேம்
எனவே விளங்கு மடிசூடு மன்னன் 35.
ஊற்றுப் பெருக்குடை யாற்றின் பெருமை
கைவை யெனதரனுக் கேவிய
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோர்க்கே. 38.

# சேக்கிழாரும் இயற்கையும்

(வே. கணேசன்.)

சேக்கிழார் இயற்கையையும், அதனது எழிலையும் எவ்வாறு உலக வியல்புடன் இணைத் திருக்கின்றா ரென்பதைக் குறித்து நோக்குவாம்.

விண்ணுலகினின்றும் மண்ணுலகிற் கனுப்பப்பட்ட ஆலாலசுந்தரனாராகிய சுந்தரமூர்த்திநாயனுர் பூவுலகில் வந்து தோன்றினர். நரசிங்கமுனையர் என்பவரால் வளர்க்கப்பட்டு ஒவ்வொரு பருவமாகக் கடந்து மணவினைப் பருவத்தையடைந்தார். மணவினைக்குரிய சடங்குகள் யாவும் முடித்து மங்கல நாண் புனையும் சமயத்தில், கடவுள், தான் வாக்களித்தபடி அங்கு வந்து வழக்காடி சுந்தரரை ஆட்கொண்டனர். பின் நாவலூரர் ஒவ்வொரு சிவதலங்களாக தரிசித்துக்கொண்டு திருவாரூரை யடைந்தனர். அங்கு சிவபிரான், "நாமுன்பு தொண்டு கொண்ட வேள்வியிலன்று நீ கொண்ட கோல மென்றும் புனைந்து நின்வேட்கை தீர வாழி மண்மேல் விளையாடுவாய்" என்றருளிச் செய்தார். அவர் கட்டளைக்கிணங்க ஆரூரர் தினமும் திருவாரூரரைச் சென்று தரிசித்து வந்தார். நிற்க.

கைலயங்கிரியில் ஆலாலசுந்தரரைக் கண்டு தங்கள் மனதை யவர்பால் விடுத்து மயங்கி நின்ற கமலினி, அநிந்திதை என்னும் மங்கையர் இருவருள் முற்கூறியவள், அத்திருவாரூர் திருநகருள் கணிகையர் குலத்தில் வந்து அவதரித்தனள். அவள் பெயர் பரவை. அரனிடத்தில் மாறா அன்பு கொண்டொழுகி வந்தனள். ஒருநாள் மாலை புற்றிடங்கொண்ட பெருமானைத் தரிசிக்கவெண்ணி, பசும் பொற்றட்டில், தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம், கற்பூரம் முதலிய யாவுமெடுத்து, தாதிகள் புடைசூழ தாரகை நடுவண் தண் மதியே யென்னும் வண்ணம் இடைதுவள, அன்னநடை பயின்று அழகாக வந்து கொண்டிருந்தாள்.

அச் சமயம் நமது ஆலாலசுந்தரரும் அடியார் புடைசூழ கோயிலை நண்ணினுர்.

மங்காவெழில் மங்கையை நந்தாவெழில் நம்பி கண்டார்; காதல்கொண்டார். மங்கையும் மன்னனைக் கண்டாள்; மையல் கொண்டாள். பின், பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணிப்புண்ட இருவரும் உரையாடாக் குறையொன்றுடன் தத்த மிருப்பிடமேகினர்.

அம் மங்கைக்கும் மன்னனுக்கும் ஒன்றிலும் மனம் நாடவில்லை. நேரமும் சென்றது. சூரியனும் இவர்கள் விரகதாபத்தைக் காணச் சகியாதவன் போல் மேற்றிசையில் மூழ்கினன். இருளாகிய மங்கையும் தனது குளிர்ந்த கரங்களால் மாந்தர்களின் கண்களைப் புதைக்க ஆரம்பித்தனள். சிறிது நேரஞ் சென்றதும் நீலவானில் தண்மதி அழகாக வெழுந்தது. இருளாகிய வரக்கியை இருந்த விடந்தெரியாமல் அடித்துத் துரத்திக்கொண்டு வருந் தோற்றத்தைச் சேக்கிழார்,

"மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்திஞல்
இறு மருங்குலார்க் கியார்பிழைப் பாரென்று
நறு மலர்க்கங்கு னங்கைமுன் கொண்டபுன்
முறுவலென்ன முகிழ்த்தது வெண்ணிலா."

என்று கூறி வருணிக்கிறார்.

நளிர் சங்குலாகிய நங்கை தனது பற்களாகிய வெண்ணிலவை வெளியிற் காட்டி நம்பியாரூரரைப் பார்த்து,

"வன்றொண்டா! நீ யாண்டு மானிடத்து மாருதவன்பு கொண்டவன். உலகத்தின் தன்மை யித்தகையதென்றும், பெண்கள் இத்தன்மையவர்களென்றும் நன்குணர்ந்தவன். நல்ல அறிவாளி. ஞானநூற்கள் யாவும் கற்றுக்கரை கண்டவன். அதுவு மல்லாது கடவுளே உன்னைத் தனக்குத் தோழஞக ஆக்கிக்கொண்ட பெருமையை யுடையவன். அத்தகையோஞகிய நீயே துவளுமிடையையுடைய அப்பாவையைக்கண்டு அவளது அழகில் மூழ்கி, அவளைப் பார்த்து,

"கற்பகத்தின் பூங்கொம்போ
காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ..............."

என்று அதிசயித்தாயே! ஞானத்துயர்ந்த வுனக்கே அம் மூலமாதை வெல்ல முடியவில்லையாயின் சாதாரணமாந்தர்களைப்பற்றி யென்னென் றியம்புவது! அவர்களுக்கு பெண்ணுசையை ஒழிக்க வியலுமோ? ஒருபொழுதும் முடியாது," எனக் கூறி நகைப்பது போன்றிருக்கின்றதாம்.

இக் கவியில் சேக்கிழார் நம்பியாரூருக்குப் பாவைபாலிருந்த அன்பின் மிகுதியையும் நன்கு விளங்கியுள்ளார்.

ஒரு பொருள் ஒருவனி னுள்ளத்தைக் கவருமாயின், அஃதை யெவ்விதத்திலேனு மடைய வேண்டுமென்றுமோ ரெண்ணம் அவனுக் குதித்த லியல்பே. அப்பொருள் ஒரு பெண்ணுயின், அதிலும் வானோரிலும் வளப்பு மிக்க வோர் வனிதையாயின் தன்னுயிரைக் கொடுத்தேனும் அதை யடைய விரும்புவனன்றே! அப்பொழுது பிறர் எளனத்தைக் கவனியான், ஊனுறக்கங்கொள்ளான்; மெய்வருத்தம் பாரான், கருமத்திலேயே கண்ணுயிருப்பான். எத்துணைபேர் எல்ன கூறினும் தன் மனதைத் தளரவிடான்.

இவ் வுண்மையையே நமது சேக்கிழார் இயற்கை வாயிலாக வெளிப்படுத்தி யுள்ளார். உலக வியல்புக்கும் இயற்கைக்கு மொற்றுமை யேற்படுத்தி யுள்ளார்.

இப் பாட்டிலேயே, எத்தகைய முத்தி ஞானத் துயர்ந்தவர்களாயினும் பெண்களின் வலையினின்றும் மாற முடியாதென்னு முண்மையும் இனிது விளக்கி யுள்ளார்.

"மறுவில் சிந்தை வன்றொண்டர்."

என்று கூறி யிருப்பதினின்றும் அஃது நன்கு விளங்கும்.

கவிக்கரசாகிய கம்பரும் பெண்ணாசையைப்பற்றி,

"ஊறுசேர் ஞானத்துயர்ந்தவ ராயினும்
வீறுசேர் முலைமாதரை வெல்வரோ."

என்றும்,

"ஆண்பாலாரே பெண்பாலாரோ
டடைவம்மா."

என்றும் கூறியுள்ளார். எட்டாந் திருமுறை இயற்றிய வாதவூரடிகளும் தில்லையில் வைத்தருளிச் செய்த போற்றித் திருவகவலில், மேலும்,

'கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தங்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்."

என்று கூறுகிறார். பெண்களின் பார்வையை "கூர்த்த நயனக்கொள்ளை" என்று உண்ணடுங்கிக் கூறுகிறார்.

இனி அடுத்த செய்யுளையுஞ் சிறிது நோக்குவாம்.

நீலவானில் கோலமாக வெழுந்த வெண்ணிலா மேலெழுந்து கொண்டே வருகிறது. நீர் நிலைகள் யாவும் நன்கு ஒளிபெற்று விளங்குகின்றன. அந்நீர் நிலைகளிலுள்ள ஆம்பல்கள் தங்களது காதலனாகிய தண்மதியைக்கண்டு இன்ப மிகுதியால் நகுவன போன்றலர்கின்றன. பகலெலாம் தண்ணீருள் ஆழ்கி யிருந்து மதியின் வரவால் வெளிக்கிளம்பி யலர்ந்த கைரவத்தை,

"அரந்தை செய்வார்க் கழுங்கித் தம்மாருயிர்
வரன்கை தீண்ட மலர்குல மாதர்போற்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்க டீண்ட வலர்ந்த கயிரவம்."

என்று செம்மையுறச் செப்புகின்றார்.

ஈண்டு கவி "கற்பு" என்பது யாதென்றும், கற்புடை மங்கையரி னியல்பும், மனப்பான்மையும் யாதென்றும் இனிது விளக்குகின்றார்.

சூரியவெப்பம் தாங்காது பகற்பொழுதெலாம், தண்ணீருள் மூழ்கிக் கிடந்து, தண் மதியின் நல்வரவால் அலர்ந்த ஆம்பல்களை ஓர் கற்புடைய மங்கைக்கு ஒப்பிட்டு, "அடங்கை செய்வார்க் கழுங்கித் தம்மாருயிர் வான்கை நீண்ட மலர்குல மாதர்போல்" என்று கூறி யுள்ளார்.

ஓர் கற்புடைய மங்கை தனது இன்னுயிர்க் காதலனை யல்லாது பிறிதொரு ஆடவனைக் காணவோ, அன்றி அவனது மெய் தன் மெய்யிற் றீண்டவோ நேரிடின் சொல்லொணாத் துயரடைவாள். அப்பொழுது அவளைப் பெண்ணிற்குரிய குணங்களாகிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை தோன்றி வாட்டும். நிற்க வாற்றாதவளாய்த் துவளுவாள், தன் குறையைச் சோதரியாகிய பூதேவியிடத்து முறையிடுபவள் போன்று தலைகுனிந்து நிலநோக்கி நிற்பாள். அவ்வேற் றாடவன் தன்னை விட்டகலும் வரை தலைநிமிராள். அவளது தாமரைமுகம் பொலிவிழந்து வாடும், அழகு குன்றும், எண்சாணுடம்பும் ஒருசாணாகக் குறுகும்.

பிறகு தன்னின்னுயிர்க்காதலன் முகங்காணின் அவனைப் புன்முறுவலுடன் வரவேற்பாள். அவளுற்ற துயர் யாவையையும் மறந்து விடுவாள். தான் துன்புற்றதைவிடப் பன்மடங் கதிகமாக வின்புறுவாள்.

அஃதேபோல் கதிரவனின் வரவால் ஆம்பல்கள் மிகவும் துயருறுகின்றன. "நமது காதலனாகிய தண் மதியின் வரவு எத்தகைய குளிர்ச்சியுடனும், மனதிற்கு ஒரு இன்பத்துடனு மிருக்கின்றது! இக் கதிரவனின் வரவோ, ஆயிரங் கரங்களையுடைய நிசாசரக்கன் சிவந்த முகத்துடன் நம்மைச் சீறி வருவது போன்றிருக்கின்றதே!" என்று நடுங்குவது போன்று வாடுகின்றன. "இவ்வரக்கனை நாம் கண்ணெடுத்தும் பார்த்தல் தகாது" என்று நினைப்பது போன்று இதழ்கள் எல்லாம் அடைகின்றன. "இவன் முன்னின்றால் என் செய்வானோ! ஆகையால் இவன் கண்ணிற் காணாது எங்காவது சென்று விடுவோம்" என்ப போன்று தண்ணீருக்குள் தலைசாய்ந்து விடுகின்றன.

கதிரவன் மறைந்ததும் தண்மதி வானிலெழுகின்றது. "நாம் நமது காதலிகளுக்குத் தெரியாமல், நமது வருகையை எதிர்நோக்கி நின்றனரா? அல்லது யாது செய்கின்றனர் என்று ஒளிந்து பார்க்கவேண்டும்" என்னும் எண்ணங் கொண்டது போன்று மரங்களினிடையே ஒளி வீசுகின்றது. ஆனால் ஆம்பல்களோ கள்ளனிலும் கள்ளனாக விருக்கின்றன. "நமது காதலன் நம்மிடத்தில் ஒளிந்து விளையாடுகிறான். அவன் காணா வண்ணம் நாம் அவன் கண்களைப் பொத்தவேண்டும்" என்று எண்ணங் கொண்டெழுபவைபோன்று நீருக்குள்ளிருந்து தலையைத் தூக்கி வெளிக்கிளம்புகின்றன. இஃதை யறிந்த தண் மதியாகிய காதலன், "நாம் இனி ஒளிந்தால் நம்மை வந்து பிடித்து விடுவார்கள். ஆகையால் நாமே நேரிற்சென்று தண் கரங்களால் நாமே நேரிற்சென்று தண் கரங்களால் தழுவி யின்புறுவோம்" என்று எண்ணி வெளிவருவது போன்று மரங்களி னிடையினின்றும் வெளிவந்து நன்கு பிரகாசிக்கின்றது. காதலனைத் தம்முன் கண்ட வாம்பல்கள் "நம் காதலன் நம்மிலும் கள்ளனா யிருக்கின்றான்" என்று நகுவன போன்றலர்கின்றன. அப்பொழுது அவைகளுக்கு கதிரவன் செய்த கொடுமைகள் யாவும் மறந்துபோய் விடுகின்றன. ஓர் புத்துணர்ச்சி யுண்டாகின்றன. வெண்ணிலவின் குளிர்ந்த கிரணங்களில் கட்டுண்ட வாம்பல்கள், காதலனின்

ஆலிங்கனத்திற் குட்பட்ட காதலிகளே போன்று இன்புற்று மகிழ்வெய்து கின்றன.

இக் கவியில் சேக்கிழார் கற்பின் தன்மையை யினிது விளக்கியுள்ளார்.

பெண்களுக்குக் கற்பே அணிகலன், கற்புள்ள மங்கைக்கு எக்காரியமும் எளிதிற் கைகூடும். வானோர்களும் கற்புள்ள மங்கையை யஞ்சுவர். ஓர் பெண்ணிற்கு கற்பைவிட உயர்ந்த தன்மை யாதொன்று மிலது. கற்புடைய மங்கையே மங்கையர்க்கரசி. குறள்வெண்பா வடியால் வையத்தா ருள்ளுவ வெல்லாம் ஓர்ந்தளந்த வள்ளுவரும்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனுந்
திண்மை யுண்டாகப் பெறின்."

என்று இனி தோதியுள்ளார். கற்புடைய பெண்ணன்றோ பெண்! நம் பாரதநாடு கற்பு நிறைந்த பொன்னாடு, கற்பினால் விளைந்த காரியங்கள் எத்தனை! ஒன்றோ! இரண்டோ!

இரும்பு பொரிந்ததும் கற்பாலே!
இரவு நீண்டதும் கற்பாலே!
மன்னன் மாண்டதும் கற்பாலே!
மதுரை யெரிந்ததும் கற்பாலே!
வேடன் வெந்ததும் கற்பாலே!
வெந்தழ லவிந்ததும் கற்பாலே!

இத்தகைய கற்புமிக்க பொற்புடை நாடன்றோ நம்நாடு!

சேக்கிழார் கற்பென்னும் விழுமிய பொருளின் உயர்தன்மையை இயற்கை வாயிலாக இனி தோதியுள்ளார். அன்னவரின் பெருமையே பெருமை!





# ஒரு பறவையின் இயற்கைத் தொண்டு

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

ஒரு நாட் காலையில், கனிகள் கனியத் தொடங்கும் ஒரு மாஞ்சோலையில் பரிதியின் ஒளி படர்ந்தது. பொழுது செல்லச் செல்ல அவ் வொளி அடர்ந்த கிளைகளின் இடையே புக்கது. இலைகள் நெருங்கிய கிளைமருங்கில் அமைந்த ஓர் பறவைக் கூட்டிலும் அவ்வொளி தட்டிற்று. அவ் வொளியின் காய்வு கூட்டில் பட்டதும் கூட்டினுள் துயின்ற தாய்ப் பறவை சிறகை அடித்து எழுந்தது. அவ் வொலி கேட்ட குஞ்சுகளும் எழுந்தன.—எழுந்த குஞ்சுகள் வியப்பு கொண்டு தாய்ப் பறவையை நோக்கி 'அம்மையே! இன்று நம்மிடைத் தோன்றிய புதுமை யென்ன! அவற்றின் ஏதுவென்னை? எஞ்ஞான்றும் இரவி எழுதற்கு முன்னரே எழும் நாம் இன்று இந் நேரம் எழக் காரணம் என்ன? என வினவின.

சேயுரை கேட்ட தாய்ப்பறவை அவைகளை நோக்கி 'மக்காள்! யானும் அதைப்பற்றியே ஆராயுகின்றேன். எனக்கும் அஃது புலப்பட வில்லை. ஒருகால் பின்னுள் நமக்கு வருந் துன்பத்தைக் காட்டும் அறிகுறியாக இது இருக்கலாம்' என்றுரைத்தது.

குஞ்சுகள் 'தாயே! நாம் எவருக்கு இன்னல் இழைக்கின்றோம். நாம் எவரைக் கெடுக்க எண்ணுகின்றோம். நாம் யாவருக்கும் நலம் புரியும் நல்லவ ரல்லமோ? நமக்கு என் துன்பம் வருகின்றது?' என அவை நவின்றன நற்றாயை நோக்கி.

மக்களே! என் செல்வக் குழவிகளே! உங்கட்கு உலகம் தெரியாது நீங்கள் சிறகு முளையா சின்னஞ் சிறியோர். வையகம் பரந்தது. அவ் வையகத்தின் கண் நல்லோரும் பொல்லோரும் குழுமியே வாழ்வு நடாத்துகின்றார். அவருள் நல்லோர் என்பார் நம்மைப் போற்றி, நாம் பிறர்க்குப் புரியும் கைம்மாறற்ற வினையை யோர்ந்து நம்மிடை அன்பு செலுத்துகின்றார். தீயோரோ நம்மைத் தூற்றி நமது பொன்னிறச் சிறகில் அடங்காக் காதல் கொண்டு அமையம் நேர்ந்துழி யெல்லாம் நம்மைச் சிறைப்படுத்த வழி கோலுகின்றார். அவருள் இன்னுஞ் சிலர் நமது கொழுத்த சிதறானில் அடங்காக் காமங் கொண்டு கற் சுழற்றியும் சன்னி தொடுத்து நம்மைக் கொல்ல முயலுகின்றார். இன்னும் அவர் நமக்குஞற்றும் இன்னலினை எண்ணும் போழ்து எனது உள்ளம் குழைகிறது. வலை வீசியும் கரு மருந்தினைக் கொண்டும் ஒரே போழ்தில் நம்மில் நூற்றுக் கணக்கானவரை நமனுலகிற்கு

அனுப்புகின்றார். இதுவெல்லாம் நமக்கு நேரும் துன்பம் அல்லவோ! என உடல நடுக்குடன் உரைத்தது அறிவு நிறைந்த அத்தாய்ப் பறவை.

இஃதெல்லாம் கேட்ட குஞ்சுகள் மிகப் பயந்தன. அச்சத்தால் அவைகளின் உடல்கள் ஆடின. தாயை நோக்கி, 'அம்மையே! நீ இன்று வெளியிற் போதல் வேண்டா. எங்கட்கு மிகவும் அச்சமாயிருக்கிறது. அத்தீயோரால் எங்கட்கு வினை விளையுமோவென எங்கள் உள்ளம் நடுங்குகின்றது'' என்று தாய்ப் பறவையை நோக்கி அவை கூறின.

தாய்ப்பறவை 'என்னுயிர்க் கண்மூளைகளே! நீங்கள் ஏன் அஞ்சுகிறீர்? வருவது வந்தே தீரும். அதை எண்ணி அஞ்சுதல் வேண்டா. யான் இன்று வெளியிற் செல்லாது இவணிருப்பின் இன்று நீங்கள் நற்கனியும் பிற நல்லுணவும உண்ணுதல் யாங்ஙனம்? உங்கட்கு இன்று உணவெடுத்தல் இயலுமே? ஆதலின் யான் இன்று வெளியிற் போதல் இன்றியமையாததே. யான் போய் விரைவினில் வருவேன். நீங்கள் அதுகாறும் அமைதியாய் இருங்கள். இன்னும சில் ஞான்றிலோ எனக்கு வெளியில் போக வேண்டும் அவசியம் நேரா. ஏனெனின் நாம் வதியும் இம் மரத்தின் கண்ணே அஞ்ஞான்றுகளில நற்கனிகள் கிடைக்கும். இன்று அவையெல்லாம் காயாகவும் செங்காயாகவும் இருக்கின்றன. இவைகள் நன்கு கனிந்து பழுக்குங்காலும் நீங்கள் ஊக்கமாய் இவணிருத்தல் வேண்டும். உங்கள் உள்ளத்தின் கண் அச்சம் எழுதல் கூடாது' என்று கூறியது. குஞ்சுகளும் இது கேட்டு அமைதி கொண்டன.

ஆதித்தன் ஒளி யாண்டும் பெருகியது. தாய்ப் பறவையும் குஞ்சுகளிடம் விடை பெற்று கூட்டை விட்டு வெளிப் போந்தது. காட்டினுட் புகுந்தது. மரங்களிலெல்லாம் அமர்ந்தது. செடிகளில் இருந்தது. கொடிகளில் தங்கியது. அதன் கூரிய விழிகொண்டு தன்குழவிகட்கு எங்கணும் உணவு தேடியது. அன்று அதன் விழிகட்கு ஒன்றும் புலனாகவில்லை. கனி மரங்களெல்லாம் வெறுமையுடன் நின்றன. செடிகளும் கொடிகளும் தங் கனிகளைத் தவற விட்டு அசைவற்று நின்றன. இதெல்லாம் கண்ட பின்னரும் பறவை அலைந்தது. பச்சை கண்ட இடமெல்லாம் பறந்து திரிந்தது. நன்கு ஆய்ந்து நோக்கிற்று. ஒரு விடத்தும் ஒன்றும் கிடைத்தில. பரிதி வானத்தின நாப்பண் வருங்காலும் காடும மேடும் அலைந்து சலித்தது. அதன் உடலெல்லாம் ஆதித்தனின் வெய்யசூடு காய்ந்தது. பறவை அஃதையும் பொருட்படுத்தவில்லை. 'முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை, இன்மை புகுத்திவிடும்'. தெய்வத்தா னாகாதெனினும் முயற்சிதன், மெய் வருந்தக்கூலி தரும்' என்பனபோன்ற பொன்னுரைப் பொருளை நினைத்தது. எங்ஙனமாயினும்—தம்முயிரை ஈந்தாயினும தம்மாசை குழவிகட்கு கனிகொண்டு செல்லுதலையே அஃது பெரு நோக்காகக் கொண்டது. கடைசியாக ஒரு மரத்தின் கிளையில் அமர்ந்தது. சிறிது நேரம் இளைப்பாறியது. அது போழ்து அதன் தூய உள்ளத்தில் பல எண்ணங்கள் எழுச்சிகொண்டன. தங் குழவிகள் தம்மைக் கனியொடு எதிர் நோக்கிக்கொண்டிருக்கும் என்ற எண்ண எழுச்சி எழுந்ததும் பறவையின் உள்ளம் தீயால் சுட்டது போன்று துன்புற்றது. அது போழ்து மெல்லிய தென்றல் ஆடியது. பறவையின் உள்ளில் ஓர் ஊக்கம் உதித்தது. அவ்வூக்கத்தால் அப்பறவை 'எங்ஙனமாயினும்

யான் களிகொண்டே என் செல்வக் குழவிகளைக் காண்பேன்' என்னும் வேளவியுடன் பின்னும் பறந்தது.

வானத்தில் விரைந்து பறந்த பறவை கருங்காட்டைக் கடந்தது. நீண்ட யாற்றைக் கடந்தது. சுரக்கும் ஊற்றைக் கடந்தது. விரைந்து பல தூரத்தைக் கடந்தது. சேய்மையில் பறந்துகொண்டிருந்த பறவை கீழ் நோக்கியது. அதன் விழிகட்கு கீழ்ப்பாக மெல்லாம் நீலக் காட்சி அளித்தது. பறவை பின்னும் தாம் பறப்பதை நிறுத்தாது சிறிது தாழ்ந்து பறந்தது. இதுபோழ்து பறவை ஏக்கங்கொள்ளுகிறது. ஏன்? அந்நீலக் கவின் அளிக்கும பாகமெல்லாம் கடலாய் இருந்தது. வழி தெரியாது, தாம் செல்லும்கட மோராத சென்ற பறவை இதுபோழ்து கடலையும் கடந்தது. ஒரு நிலப்பரப்பை அடைந்தது.

அந்நிலப் பரப்பிலே காடுகள் இல்லை. தோட்டங்கள் இல்லை. தோப்புகள் கிடையா. ஆண்டாண்டு சிற்சில மரங்களே காணப்பட்டன. பெருங் கட்டிடங்களால் அந்நிலப்பரப்பு நிறைந்திருந்தது. வெற்றிடம் ஆண்டு காணல் அரிது. பறவை அந்நிலப்பரப்பெல்லாம் பறந்து பறந்து நோககியது அது தன் கிளைஞரைக் கண்டிலது. தன்னுட்டுப் பொருட்களைக் காண்டிலது. அந்நிலப்பரபபிலுள்ள மரங்கள், மலைகள், ஆறுகள் ஆகியனவெல்லாம் மாறுபட்டேயிருந்தது. பறவைக்கு தங்குஞ்சுகளின் நினைவு தோன்றியது. அது ஆண்டு ஈண்டிய மரத்தொகுதிகளிலெல்லாம் தங்கூடு அமைவுற்றிருக்கிறதா, தங்குஞ்சுகள் உறைவுற்றிருக்கிறதாவென ஆய்ந்தது. ஒரு இடத்தும் கூட்டைக் கண்டிலது. பறவை நெடுகப் பறந்து அலைந்தது. ஆனால் அந்நிலப் பரப்பைக் கடக்க அது வழியுங் கண்டிலது.

நாட்கள் பல சென்றன. பறவை ஏக்கத்தால் ஆக்கம் குலைந்தது. குஞ்சுகளை நினைந்து நினைந்து உருகியது. அன்று ஒரு நாள், தாமும் தங்குஞ்சுகளும் பிந்தி எழுந்த அபசகுனப் பயன் இதுவே என்றறிந்தது. அது, போழ்திற்கு உணவெடுத்தல் கிடையா என்றும் தலையைக் கீழ் சாய்த்து துன்ப வொலியைக் கிளப்பிக்கொண்டிருந்தது. அதன் புத்தியும் மாறுதல் அடைந்தது போல் தோன்றியது.

தன்னுட்டை நினைந்தது. தங்கூட்டை நினைந்தது. குஞ்சுகளை நினைந்தது. ஒரு நாள் மாலை மயக்கமுற்று—இல்லை—உயிரகன்று ஒரு மாளிகையின் முன்னர் தொபீரென்று பறவை வீழ்ந்தது.

என்ன அழகான மாளிகையது! அம்மாளிகை ஒரு பைம்புற் றரையின் மீது அமர்ந்திருந்தது. இம்மாளிகை பூராவும் சலவைககற்களால் சமைக்கப் பெற்றிருந்தது. இம்மாளிகையின் முன் பாங்கர் இரும்புக் கம்பிகள் கொண்டு பின்னிய நெடுங்கபாடம் அமைந்திருந்தது. கபாடத்தின் வாயிலாய் வெளிப் போதற்கு மூன்று படிகளும் அமைக்கப்பட்டிருந்தன.

இப்படிகளின் ஒன்றிலேயே நமது பறவை வீழ்ந்தது. பறவை விழுந்த தொனி கேட்டதும், இம்மாளிகையினுள் அடைக்கப் பெற்றிருந்த ஒரு வாலிபன் கபாடத்தின் இடுக்கு வழியே கையை நீட்டி அப்பறவையை உள்ளெடுத்தான். அப்பறவையைக் கண்டதும் அவ்வாலிபனது உள்ளத்தில் இன்பம் பெருகியது. அப்பறவை விழிகளில் வைத்து ஒற்றியெடுத்தான். அதைப் புகழ்ந்து பேசினன்.

என்னே வியப்பு! என்னே புதுமை! இறந்த புள்ளை இவன் இங்ஙனம் கண்ணில் வைத்து ஒற்றுதலும், புகழ்ந்து பேசுதலும் எற்றுக்கு? இவன் பித்துக்கொண்டவனாய் இருப்பனோ? ஆ! அங்ஙனமன்று.

இவ்வாலிபன் நமது பறவை பிறந்து வளர்ந்து வாழ்ந்த நாட்டினன். பெரிய போர் வீரன். நாட்டின் நன்மைக்கு—நாட்டின் பெருமைக்கு—நாட்டின் வெற்றிக்கு—போர் முகத்திலே நின்று அருஞ்சமர் புரிந்தோன். பகைவரின் சூழ்ச்சியால்-வஞ்சனையால் இவன் கைது செய்யப் பெற்று சிறையில் வைக்கப்பட்டான்.

இவன் தனதுயிரை பெரிதெனக் கருதினானல்லன். பிறநாட்டு—தன்னை சிறைபடுத்தி—அடிமையாக்கிய நாட்டின்கண் எழுந்த உணவை அருந்துதற்கு இசைந்தானல்லன். தன்னைச் சிறைப்படுத்திய நாட்டிலேயே தன்னுயிரை பலி செய்ய எண்ணினான்.

தன்னை வெறுத்தல் செய்தான், தன் கிளைஞரையும் உற்றார் பெற்றாரையும் வெறுத்தான். பிற பொருட்களையும் வெறுத்தான். ஆனால் ஒன்றை மட்டும் வெறுத்தானல்லன். அவ்வொன்று அவன் பிறந்த பொன்னாடு.

அவனது பொன்னாட்டின் இயற்கை எழிலோவியம் அவனது மனக்கண் முன் தோன்றியது. வானைக் கிழிக்கும் உயர்வுசான்று தேனினுமினிய நீரருவியுடைத்தாய், நெடுமரமுடைத்தாய், கொடுவிலங்குடைத்தாய், விளங்கித் தோன்றும் பொன் மலையை எண்ணினான். புதுநெல் விளையும் செழும் புனற்பூமியை நினைத்தான். தன்னாட்டகத்தே உரிமையுடன் பறந்து திரியும் புள்ளினங்களை எண்ணினான். அகன்ற நிலங்கள் கடந்து விரைந்தோடிவரும் பெருநதியினை ஓர்ந்தான். இன்னும் அவன் நாட்டகத்தே கெழுமிய பிற இயற்கை இன்பக் குவியலையெல்லாம் எண்ணி எண்ணி இறும்பூதெய்தினன்.

அவன் இறக்கும் இறுவாயில் தன்னாட்டுப் பொருள் ஒன்று காண விழைந்தான். அதற்கு ஆண்டவனையும் வேண்டினான். ஆண்டவன் அவ்வுண்மைத் தேசபக்தனின் கருத்தை நிறைவேற்றுதற்கு அரண் செய்தான். என்னே தொடர்பு! நாடெல்லாம் அலைந்த பறவை முடிவில் யாண்டு இறந்து வீழ்ந்தது. அவ்வீரனின் அன்புக்குருதியினின்றும் எழுந்த சுழலானது அப்பறவையை அவனது அண்மையிற் கொண்டு சேர்த்தது.

பறவையைப் பெற்ற வாலிபன் இறைவனைப் புகழ்ந்தான். தன்னாட்டின் கண் வைத்து தனக்கு இனிய இசையைக் கைம்மாறு கருதாது தந்த பறவையே இதுபோழ்து தனது வெற்றுடலுக்கு அதனுடலைத் துணையாக தருதலையும் அறிந்த வாலிபன் மனம் மகிழ்ந்தான். பறவையின் உயரிய இயற்கைத் தொண்டு அவனது உயிர்க்கடவுளின்முன் காட்சி அளித்தது. அக் கடவுள் அமைதி கொண்டார். அக்கடவுள் அவ்வெற்றுடலினின்றும் வெளியேறி வல்லான் முற்று முணர்ந்தானைச் சென்றடைந்தார்.

மறுநாட் காலை, அச்சிறைக்கூடக் காவலர்கள் அவ்விரு வெற்றுடல்களைப் பற்றியும் ஏதோதோ பேசி வீண் புரளி செய்துகொண்டிருந்தனர்.

---



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 50-வது காரிகை

ஆத்யாத்மிகாஸ்ச்சதஸ்ரஃ பிரகிருத்யுபாதானகால பாக்யாக்யாஃ
பாக்யா விஷயோபரமாத்பஞ்ச நவதுஷ்டயோபிஹிதாஃ

**மடி ஒன்பது வகைத்து**

மடி ஒன்பது வகையதெனக் கொள்ளப்படுகின்றது. இம்மடி அந்தரங்கமாய் பிரகிருதி, உபாதானம், காலம், விதி என்றவற்றின்மாட்டு நிகழ்வதால் நான்கு விதங்களாகவும் வெளி நோக்கி பஞ்ச தன்மாத்திரைகளை நிக்கிரகம் பண்ணுவதால் ஐந்து விதங்களாகவும் ஆக ஒன்பது வகைப்படுகின்றது.

உரை:—மடி யென்பது விவேக நோக்கம் அற்றிருத்தல். படபடப் பென்பது அடக்கக் குறைவு. நோக்கமற்றிருப்பினும் ஞானம் கைவராது; நோக்கமிருப்பினும் சாவதானக் குறைவால் ஞானம் கைவராது.

"தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்
நோக்கிற் குழையு மென்றுந் தீபற,
நோக்காமல் நோக்க வென்றுந் தீபற"

என்று திருவுந்தியாரில் கூறியபடி முனைக்காத நோக்கத்தாற் பெறப்படுவது. ஞானங் கைகூடுதற்கு கொக்கின் நோக்கம் வேண்டற்பாற்று. தூக்கமும் விழிப்புமில்லாது இருந்து தனது காரியத்தை முடித்துக் கொள்கின்றது.

முள்ளில் ஓர் வஸ்திரம் மாட்டிக்கொண்டால் அதனை நோக்காது முள்ளைவிட்டு நீக்க முடியுமோ? முடியாது. படபடப்பாய் இம்முள்ளிற் றுனே மாட்டியிருக்கின்றதென இழுப்பினும் வஸ்திரம் கிழிந்தும் பயனற்றுப்போம். ஆகவே நோக்கத்தையும் விடாது, இழுப்பதையும் விடாது படபடப்பையும் தூக்கத்தையும் அடக்கி வஸ்திரத்தை முள்ளினின்றும் விடுவிக்கலாம். மாயையாகிய முட் காட்டில் ஆன்மாக்கள் வினைவயத்தால் மாட்டிக் கொண்டனர். தக்க தந்திரத்தாலன்றோ மாயையை விட்டு விடுதலை பெற வேண்டும். மாயையை நோக்கவும் வேண்டும், அதனோடு போராடவும் வேண்டும். தந்திரத்தை விடவுங்கூடாது. ஆகவே மாயையின் இரகசியத்தானங்களைக் கண்டு வெகு தந்திரமாய் அவளது சிக்கலினின்றும் நீங்க வழிதேட வேண்டும்.

மடியின் ஒன்பது வகையாவது:—

1. பிரகிருதியை நோக்கிய மடி (அம்பா): பிரகிருதியே தனக்கேற்பட்ட ஒழுங்கில் அவரவர்க்கும் விவேகத்தை யெழுப்பி முத்திக்கரை சேர்ப்பிக்குமென வாளா (சும்மா) விருத்தல்.

2. உபாதானத்தை நோக்கிய மடி (சலீல): பிரகிருதியே முத்தி சேர்ப்பிக்குமெனல் பொருந்தாது; எவ்வாறெனின் பிரகிருதி எவர்க்கும் பொதுவாகலின் அஃது முத்தி கூட்டி வைப்பின் யாவரும் ஏககாலத்தில் முத்திசேர வேண்டும்; அவ்வாறு கூடாமையின் துறவுபூண்டு திரிதண்டம் கமண்டலம் முதலியவற்றை ஆசிரயிப்பதுவே முத்திக்கு வழியெனத் துறவுபூண்டு வாளா விருத்தல்.

3. காலத்தை நோக்கிய மடி (ஓகா): பிரகிருதியேனும் துறவேனும் முத்தி பயப்பதாகக் கொள்வது தவறு; எவையும் காலக் கிரமத்தில் நடைபெறும். நமக்குரிய காலம் வரவும் முத்திக்கு வெளிச்சம் பிறக்குமென வாளாவிருத்தல்.

4. விதியை நோக்கிய மடி (விருஷ்டி): முத்திக்கு வெளிச்சம் பிறப்பது பிரகிருதியாலு மன்று, துறவாலுமன்று, காலத்தாலுமன்று; நமக்கு அதிர்ஷ்ட மென்பது உண்டானால் அஃது கைகூடுமென விதியை நோக்கி வாளாவிருத்தல்.

சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய ஐந்தின் வழி புத்தியைச் செலுத்தச் சோம்பலுறுதல் ஐந்துவகை. ஆக மடி ஒன்பது வகைத்தெனக் கொள்ளப்படும். ஆயினும் பஞ்ச விஷயங்களை நாடலால் ஐந்துவகைத் துன்பங்கள் உதயமாகின்றன; அத்துன்பங்களைக் கருதியே மடி வருதலின் அவற்றின் விபரம் வருமாறு.

5. நன்மார்க்கத்தாற் றனத்தை (பொருளை) யீட்ட முடியாமை பற்றி இந்திரிய சுகத்தை நாடாத மடி. இஃது ஈட்டற்றுன்பத்தால் வந்த மடி.

6. ஈட்டிய தனத்தைக் காப்பாற்றுங்கால் நேரும் கஷ்டத்தை நோக்கி இந்திரிய சுகத்தை நாடாத மடி. இஃது காத்தற்றுன்பத்தால் வந்த மடி.

7. ஈட்டிக் காப்பாற்றிய தனம் செலவாய்ப்போய்ப் பின்னும் துன்பத்திற்காளாக்குமே யென இந்திரிய சுகத்தை நாடாத மடி. இஃது தனச் செலவை நோக்கி யெழுந்த மடி.

8. தனத்தை ஈட்டிக் காத்துச் செலவு செய்வதால் இந்திரிய சுகங்கள் மென்மேலும் விருத்தியடைந்து, இந்திரியங்கட்குத் தக்க இரைபோட முடியாமை நோக்கி யெழும் மடி. இஃது இந்திரியங்கள் போஷிப்பால் திருப்தியடையாமையை நோக்கிய மடி.

9. ஒருவன் இந்திரிய சுகத்தை யனுபவித்தல் காரணமாகப் பலருக்குத் துன்பம் உண்டாகின்றது. தான் சுகத்தை நாடின் பிறர்க்குத் துன்பம் விளைகின்றது; அது காரணமாக இந்திரிய சுகத்தை நாடாதது ஓர் வகை மடி.

இவ்வொன்பது வகை ஆலசியமும் முறையே, அம்பஸ், சலீலம், ஓகா, விருஷ்டி, சுதமஸ், பாரம், சுநேத்திரம், நாரிகாம், அனுத்தமாம் பாசிகம் என வடமொழியிற் சிலாற்றுபெயர் பெறும்.

இனி எண்வகைச் சித்திகளைக் குறிக்கலுற்றூர்.

## 51-வது காரிகை

ஊஹ: ஸப்தோத்யயனம் துக்கவிகாதாஸ்திரிய: சுத்தத்பிராப்தி:—
தானஞ்சசித்தயோஷ்டௌஸித்தே: பூர்வோங்குசஸ்திரிவித:

### எண்வகைச் சித்திகள்

ஊகம், சப்தம் (கேள்வி), அத்தியயனம் (கற்றல்), முக்கூற்றுத் துன்பங்களை யொறுத்தல், நல்லாரிணக்கம், தானம் ஆகியவை எண்வகைச் சித்திகளாம்.

திரிவுணர்ச்சி, வலிக்குறைவு, மடியாகிய மற்றை மூன்று பாவங்களும் இவ்வெண்வகைச் சித்திகளைத் தலையெடுக்க வொட்டா அங்குசங்களாம்.

உரை:—வலிக்குறைவின்கண் யாம் காட்டிய சித்திகள் அஷ்டமகா சித்திகளாம். இவண்கூறிய சித்திகள் கைகூடாமையையும் எட்டுவித வலிக்குறைவுக்கு உதாரணமாகவும் பாவித்துக் கொள்க.

அன்றியும் இவண்கூறிய சித்திகள் எட்டும் அஷ்டமகா சித்திகள் கைகூடுவதற்கு முற்படிகளெனவுங் கொள்க.

பாவங்கள் நான்கினுள் சித்திகள் மாயையோடு லீலை செய்தற்கும் பின்னர் முத்திப்படி யேறுதற்கும் உகந்தன. திரிவுணர்ச்சி, வலிக்குறைவு, மடியாகிய மூன்றும், சித்திகளை விளையாவண்ணம் தடைசெய்து பந்தத்தைத் திமிரவொட்டாது செய்து புருஷனை முத்திக்கரை யேறவிடாத அங்குசங்கள் போல்வன.

ஊகம்:—என்பது பகுத்தறி நோக்கம். இதனுதவியால் அறிவனாகிய புருஷன் ஒருவன் உளன் என்பது திண்ணமாய்ப் போதத்திலுறைக்கும்:

"உண்டோர் ஒண்பொருள்"—திருவாசகம்.

சப்தம்:—ஊகத்தால் இந்திரியங்கட்கும் கரணங்கட்கும் அப்பாற்பட்டு இதுவெனத் தெளிவுபட உணரக்கூடாத ஓர் பொருள் உளதெனத் தீர்மானஞ் செய்தலும், பெரியோரும் அவ்வாறே கூறி அதனது இலக்கணத்தையும் விளக்கமுறக் காட்டியிருக்கும் வண்ணம் சில சுருதி வாக்கியங்கள் கூறியிருப்பதும் புத்திக்கு எட்டுகின்றது. தனது ஊகத்தால் ஓர் ஒப்பிலாப் பொருள் உண்டு என்னும் நம்பிக்கையோடு தனது மனதில் நாட்டப்பட்ட பொருள் யாவராலும் மறுக்க வொண்ணாததாகும். வேதத்தாலும் உளதெனக் கூறப்படுகின்றதைத் தெரிந்த தீரன் அவ்வேதங்களை யுள்ளவாறு உணரல்வேண்டுமென அவாக்கொள்கின்றான்.

அத்தியயனம்:—இந்த அவா அவனைச் சுருதிகளை ஆராய்தற்கு அவனது புத்தியைத் தூண்டுகின்றது. இதனால் சத்திய சிரத்தையோடு சுருதிகளை வாசித்து மெய்ப்பொருளைத் துணிகின்றான்.

முக்கூற்றுத் துன்பங்களையும் ஒறுத்தல்:—சத்திய சிரத்தை காரணமாக எழுந்த ஊகத்தால் எவரையும் கடைத்தேற்றவல்ல பரம்பொருள் ஒன்றுளதென நம்பிக்கை யெழுந்தது. ஆம்; ஆம் நீ கொண்டது சரிதான், சுருதியும் அப்படியே கூறுகின்றதெனக் கேள்வியு முண்டாதலும், சுருதியை நேரே யாராய ஊக்கம் உண்டாகி அத்தியயனமும் கைகூடிற்று.

இவ்வாறு ஊக்கமும் கேள்வியும் கல்வியும் ஒன்றுகூடி ஓர் முனையா

# ஹோமரின் அனுபவ மொழிகள்



(தென்னாப்பிரிகா டர்பன்-திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை.)

**கடவுளுக்கு மிஞ்சியவர் ஒருவருமில்லை:—**இம் மண்ணுலகத்திலும், விண்ணுலகத்திலும், கடவுளுக்கு மிஞ்சியவர் ஒருவருமில்லை. ஹிரண்யகசிபுவும், ராவணனும் பட்ட பாடு தெரியாதா? இவ் விருவரும் கடவுளை எதிர்த்துப் போராடியதின் கதி உலகமறியும். ஆகையினாலே, செய்வதை யெல்லாம் கடவுள் பார்க்கின்றாரா என்று கருதி, அரசன் முதல் ஆண்டி வரையி லுள்ளவர்கள் துஷ்டச் செயல்களைச் செய்யக் கூடாது. அப்படி மீறிச் செய்தால், கடவுள் கோடாரி அம் மனிதர்களின் கழுத்தி லிருக்கிறது.

* * * *

**கடவுள் சட்டம் நிறைவேற வேண்டும்:—**மனிதர்களுக்கு விதிகளையும் சட்டங்களையும் நிறை வேற்றுவதா? கடவுள் சட்டத்தை நிறை வேற்றுவதா? கடவுள் சட்டத்திற்கு மனிதர்களின் சட்டம் ஒத்திருந்தால் நல்லது. இல்லையேல் கடவுள் சட்டத்தையே மனிதர்கள் மதித்து நடக்க வேண்டும்.

* * * *

**செய்ய வேண்டியதை இன்றே செய்வோம்:—**ஏ! மனிதனே! நீ தேசத்திற்குச் செய்ய வேண்டியதை இன்றே செய்து விடு. கூடிக் கூடி யோசித்துக் கொண்டிருத்தலில் பிரயோஜனமில்லை அல்லது நாளை செய்து விடுவோ மென்றிருப்பதிலும் பயனில்லை. கடவுள் நம்மிடம் தேச காரியத்தை ஒப்படைத்திருக்கும் போது அதை உடனுக்குடன் செய்யாமல், காலம்

---

யெழவே, இதுவரை துன்பங்கள் விளைந்தபொழுது அவற்றை ஒழித்தற்கு மந்திரமென்றும், யந்திரமென்றும், மருந்தென்றும், மாயமென்றும் பல சாதனங்களை நாடி ஓடிய சித்தம் அவைகளின்பால் வெறுப்பெய்தலும், துன்பங்களை முடிவுகாண்டற்கு உபாயம் மனவலிகொண்டும் அவற்றைப் பொறுத்துக் கொண்டும் அதனை நோக்குதலினும் மிக்கது வேறில்லையெனத் திண்ணம் பிறந்து அவ்வாறு நோக்கலும் முக்கூற்றுத் துன்பங்களும் ஓட்டம் எடுக்க ஆரம்பிக்கும். இதுவே அஷ்டமகாசித்திகள் உதயமாதற்கும் வாயிலாம்.

**நல்லாரிணக்கம்:—**இவ்வாறு துன்பங்கள் மனவலிகொண்டு நோக்கி முடிவுகாணப்படும்பொழுது, தேடி யோடிப் பார்த்தும் கிட்டாத பெரியோர் வலியவந்து சிநேகத்திற்கும் பாத்திரமாவர்.

**தானம்:—**நல்லார் தொடர்பு நேர்படலும் இரகசியங் கைவந்த பெரியனுங் கிட்டுவான். அவனை மகிழ்வுடன் உபசரித்துத் தனது அனுபவங்களை யவன் வேண்டி யாங்கு விளக்கலும், அவனுக்கு உபதேசமான ஞானம் தற்காலம் அவற்கு ஐயம் திரிவின்றி யுள்ளவாறு தோன்ற, அவன் தான் கடைத்தேறும் வழியைக் கண்டதால் அவ்வதிரகசியதந்திரத்தை யிவனுக்குங் காட்டுவன். இதனால் இருவரும் கரையேறுவர்.

கடத்துவது பாபச் செயலாகும். நாம் இருந்தாப் போலிருந்து சுடலைக்குப் போய் விட்டால், நாம் செய்திருக்க வேண்டிய காரியத்தைச் செய்ய வில்லையே யென்று ஜனங்கள் தூற்றுவார்கள். ஆகவே காரியத்தைத் தாமத மில்லாமல் செய்து விடு.

* * * *

**ஜோசியத்தை நம்பியிருக்க முடியுமா?:**—மனிதர்கள் ஜோசியத்தையும் குடு குடுப் பாண்டியின் சொல்லையும், வான கணித சாஸ்திரிகளின் நட்சத்திரக் கணக்கையும் நம்பி யிருக்கலாமா? அவர்களால் என்ன செய்ய முடியும்? மரணத்தைத் தடுக்க முடியுமா? மரணம் உன் கழுத்துப் பிடரியி லிருக்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள். பிறரைப் பழிக்காதே! பிறரை நிந்தனை செய்யாதே; உனக்கு இட்ட கட்டளைப்படி நட. சரியான முயற்சியெடுப்பாயானல் உன்னைக் கடவுள் ஆசீர்வதிப்பார். உனக்குக் கை கால்களும் மற்ற அவயவங்களும் சரியானபடி கொடுத்திருந்தால், உன்னைவிடப் பாக்கியசாலி வேறு யார்?

* * * *

**துக்கத்தை மாற்று:**—மனிதர்களுக்கு வரும் துக்கத்தை யாற்றுவ தெப்படி? பட்ட காலிலே படும் என்பது போல் துக்கப்பட்டவன் துக்கப்படுவது சகஜம். துக்கப்பட்டவன் பெரியோர்கள் சொல்லைக் கேட்க வேண்டும். வாலிபர்களுடைய யோசனை தடித்தன்மையாக விருக்கும். மத்திய வயதுடையவர்களின் யோசனை அவ்வளவு அனுபவம் வாய்ந்ததாக விராது. ஆனது பற்றி துக்கப்பட்டவர்கள், வயதானவர்களுடைய யோசனையைக் கேட்டு நடந்தால் அந்த யோசனை துக்க நிவர்த்தி யுடையதாயு மிருக்கும்.

* * * *

**சாந்தம் பல கொடுமைகளை விலக்கும்:**—கோபக்காரர்களின் முன்பு பொறுமையாக இரு. சாந்தத்தைக் கை விடாதே. எதிராளி எவ்வளவுக்கெவ்வளவு கோபமாகவும் பட படத்தும் பேசுகிறானே அவ்வளவுக் கவ்வளவு, நீ சாந்தமாகவும், இதவசனத்துடனும் பேசு. அல்லது கோபியின் முன்பு ஒன்றும் பேசாதே. மௌனம் சாதித்து விட்டு எட்டி விலகி வந்து விடு. இப்படி ஒரு தடவை அனுஷ்டித்துப்பார். கோபியானவன் உன்னைக் கோபித்ததற்கு மன்னிப்புக் கேட்க உன்னிடம் வருவான். இது அநுபவம்.

* * * *

**இலைகள் உதிர்வதுபோல் மனிதனும்:**—மரங்கள் இலைகளின் வாழ்க்கை எப்படியோ அப்படியே மனிதர்களின் வாழ்க்கையும். இலைகள் எப்படித் தளிர்த்துப் பச்சைப் பசேலென்று இருக்குமோ, அப்படியே மனிதர்கள் பிறந்து ஆங்காங்கு வளர்கின்றார்கள். இலைகள் எப்படி உதிர்ந்து தரை மீது சிதறிக் கிடக்கின்றனவோ அப்படியே மனிதர்கள் பல ரோகங்களால் வீழ்த்தப்பட்டு அழிகின்றார்கள்.

---




பெண்மணி:—எனக்கு என்ன குழந்தை பிறக்கும்?''

உடுக்கை யடிப்பவன்:—"ஆணோ, பெண்ணோ கறுப்பாயி! ரண்டிலே ஒண்ணு தப்பாது."

***

மோட்டார் சொந்தக்காரரிடம் அவர் நண்பர் "ஏன் ஸார்; உங்கள் டிரைவரால் உங்களுக்கு என்ன செலவாகிறது?''

மோட்டார் சொந்தக்காரன்:— அவன் சம்பளமா? கார் ரிபேரா? இல்லை கோர்ட் அபராதமா? எதைப்பற்றி கேட்கிறீர்கள்?

***

உபாத்தியாயர் :— ஏண்டா ராமா கிளிப்பிள்ளையுங் கூட நான் சொன்னதைச் சொல்லுமே.

மாணாக்கன்:- ஸார், ஸார். நான் கிளிப்பிள்ளையல்ல; நான் பையன் ஸார்.

***

ஓர் அரிசி வியாபாரியை ஓர் முரடன் நல்ல அரிசியை அவன் கொடுக்கவில்லை என்று அக்கடையில் இருந்த ஓர் கால்படியை எடுத்துக்கொண்டு 63 குத்துகள் வரை குத்தினான். அதை அவன் மனைவி பார்த்துக்கொண்டு போனாள். வியாபாரி முரடனை போ என்று மரக்காலால் தள்ளினான்.

வியாபாரி மனைவி:—உங்களுக்கு வெட்கமில்லையா! ஏன் அவனிடம் 63 குத்துகள் வாங்கினீர்கள்?

அரிசி வியாபாரி:—"அவன் 63 குத்துகள் மாத்திரமே குத்தினான். நானோ 64 கால்படி கொண்ட ஒரு மரக்காலால் அல்லவோ குத்தினேன்" என்றான்.

நாராயணன்:—ஏண்டா? வெங்கிட்டு! ஏண்டா ஓங்கப்பா கூப்பிட்டா நீ கிட்டப்போறதே யில்லையாம். சுத்தமாய்ச் சொன்னபடி கேட்கிறதே யில்லை யாம்.

வெங்கிட்டு:—ஆமாம்! எங்க சித்தப்பா பின்னாலே போனாலும் கல் கண்டு வாங்கிக்கோன்னு காலணா கொடுப்பார்! எங்கப்பா கிட்டப்போனா, கன் னத்திலே அறைஞ்சு அதையும் பொடிக்குப் புடிங்கிண்டுடுவா.

***

பெண்ஜாதி:—(கோபமாக) "நடு இரவிலா வீட்டிற்கு வரு வது?"

கணவன்:—"நான் வீட்டிற்கு வரவில்லை. பணம் எடுக்க வந் தேன்."



***

கண்ணன்:—"மனிதன் செருப்புப் போட்டுக் கொள்வது எதற்கு."

வரன்னன்:—"கோபம் வந்தால் கழற்றி அடிக்க."

***

டிராமா கம்பனி முதலாளி:—"நீர் பாடியபோது கொட்டகை நிசப்தமாக விருந்த தென்றீரே. அங்கு எத்தனைபேர் இருந்தார்கள்?"

ஆக்டர் உத்தியோகத்திற்காக வந்தவர்:— "ஒருவருமில்லை."



***

ஜோசியர்:—"உனக்கு இந்த ராகுதிசை கெடுதலாயிருக்கு. உனக்கு இன்னும் அறுபது நாள்தான் ஆயிசு."

குடியானவன்:— ஐயோ! சாமி! நல்லாப் பாருங்க. ஏதேனும் பரிகாரம் இருக்குதான்னு; செய்து தொலைக்கலாம் எளவை.'

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காங்கிரசின் சரியான வேலை.

நமது தேசத்தில் நிர்வாகச் செலவு சமாளிக்க முடியாததாக இருக்கிறது. இதற்குக் காரணம் உத்தியோகஸ்தர்களின் உயர்ந்த சம்பளம்தான். இங்குள்ள சம்பளத்தைக் கண்டு அந்நிய நாட்டாரும் பிரமிக்கின்றார்கள். இதர தேசங்களில் பெரிய மேதாவிகள் பெறும் சம்பளத்தைவிடப் பெரிய தொகையை இத்தேசத்து சாதாரண உத்தியோகஸ்தர்கள் பெறுகிறார்கள். இந்தியாவோ உலகிலுள்ள மற்ற தேசங்களை விட ஏழ்மையானது. தேசத்தின் சக்திக்கேற்ற சம்பளம் கொடுக்கப்படுவதுதான் நியாயமாகும். ஆனால் இப்போதோ இந்தியாவில் உத்தியோகஸ்தர்களின் சம்பளம் மிகவும் அதிகமாக இருக்கிறது. இம் முறையை அன்னிய அரசாங்கத்தார் நம்மீது சுமத்தி விட்டார்கள். காங்கிரஸ் மகாசபை அதிகாரத்துக்கு வந்தால் தேசத்தில் எந்த உத்தியோகத்துக்கும் 500 ரூபாய்க்குமேல் சம்பளம் கூடாது என்று கராச்சி காங்கிரசில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இப்போது சென்னை கார்ப்பொரேஷனில் காங்கிரஸ் மெஜாரிட்டியாக இருக்கிறது. தேர்தல் காலத்தில் காங்கிரஸ் வெளியிட்ட விக்ஞாபனத்தில் சம்பளங்களைக் குறைத்து அத்தொகையைக் கொண்டு பிரஜைகளின் சௌகரியத்தைக் கவனிப்பதாக வாக்களித்தார்கள். அதன்படி நிறைவேற்ற வேண்டியது அவர்கள் கடமையல்லவா? ஆகவே சென்ற வாரம் கூடிய கார்ப்பொரேஷன் கூட்டத்தில் சம்பளக் குறைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றி விட்டார்கள். இதைக்கண்டு பலர் ஆத்திரப் படுகின்றனர். சம்பளக் குறைப்பைப் படிப்படியாக அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்றும், இப்போதுள்ளவர்கள் போக இனி உத்தியோகத்துக்கு வருபவர்களுக்கு அம்மாதிரி செய்ய வேண்டு மென்றும், தேசம் பூராவிலும் ஏக காலத்தில் அத்தகைய முறையைக் கையாள வேண்டுமே யொழிய ஓரிடத்தில் மட்டும் அதைக் கையாண்டு ஒரு சிலர் மட்டும் கஷ்டப் படும்படி விடக்கூடாதென்றும் பலர் பலவாறு கூறுகிறார்கள். கொள்கையை ஒப்புக்கொண்டால் அதைச் சாத்தியமான இடங்களி லெல்லாம் அமலுக்குக் கொண்டுவர வேண்டியதுதான். சட்டத்துக்கு மீறி ஒன்றும் செய்யக்கூடாது என்பதை நாமும் ஒப்புக்கொள்கிறோம். இப்போது காங்கிரஸ்காரர் எடுத்து வரும் நடவடிக்கைக ளெல்லாம் சர்க்கார் சட்டத்துக்கு உள்பட்டவையே. ஆதலால் சர்க்காரும் இதில் தலையிட மாட்டார்களென்று நம்புகிறோம். கார்ப்பொரேஷன் உத்தியோகஸ்தர்களும் இத்திட்டத்துக்குக் கட்டுப்பட்டுத் தாங்களும் தேசத்தின் நன்மையில் கருத்துடையவர்களே என்பதை நிரூபிக்க வேண்டுமென்பது நமது அவா. காங்கிரஸ்காரர்கள் இத் திட்டத்தை அமலில் கொண்டு வந்ததற்காக அவர்களைப் பாராட்டுகிறோம். இவ்வாறே குறைந்த சம்பளம் 25-ரூபாய்க்குக் குறைவாக யாருக்குமே இருக்கலாகாது என்னும் நியதியையும் காங்கிரஸ்காரர்கள் அமலுக்குக் கொண்டுவந்தால் ஏழைகள் அவர்களை வாழ்த்துவார்கள் என்று கருதுகிறோம்.

## எங்கும் மகாத்மாவின் புகழ்

இந்தியர்களாகிய நம்மை அன்னியநாட்டார் ஒரு மாதிரிதான் நினைத்திருந்தார்கள். உண்மையைக் கூறவேண்டுமானால் மிகக் கேவலமாகக் கருதினார்கள். ஆனால் இன்று உலகில் இந்தியர் நிலைமை என்ன? இந்தியரும் தங்களைப் போன்ற மனிதர்களே என்று இதர தேசத்தார் கருதித் தக்கபடி மதிக்கின்றனர். இதற்குக் காரணம் யார்? யாரால் நமக்கு இத்தகைய மதிப்பு ஏற்பட்டது! இக் கேள்விக்கு உலகம் பூராவையும் சுற்றிப் பார்த்துத் திரும்பியவரும், இந்திய வியாபாரிகள் சங்க மாஜி உபதலைவருமான ஸ்ரீ லால்ஜி மெரோத்ரா என்பவர் பதில் கூறுகிறார். அவர் கூறுவதாவது, 'உலகத்தின் மதிப்புக்குப் பாத்திரமானவர்களாக நம்மை, மகாத்மாகாந்தி செய்திருப்பது போல் வேறெவரும் இந்த தேசத்தில் செய்ததில்லை' என்பதேயாகும். அவர் இவ்வாறு கூறுவதற்குக் காரணம் என்ன? உலகம் முழுதும் சுற்றிப்பார்த்தார். எங்கும் மகாத்மாஜியின் புகழ் காணப்படுகின்றது. அவரைப் பார்ப்பவர்களெல்லாம், 'நீர் இந்தியா தேசத்தினரா!' என்று கேட்காமல் 'நீர் காந்தி நாட்டினரா?' என்று கேட்கின்றனர். எல்லாத் தேசங்களிலும் பாமரர் முதல் பண்டிதர்வரை எல்லாருமே ஒரு இந்தியரைக் கண்டதும் காந்தியைப்பற்றி விசாரிக்கின்றனர். எங்கும் அவருடைய பெயருக்கு மதிப்பும் மரியாதையும் இருந்து வருகிறது. இவற்றையெல்லாம் அவர் நேரில் கண்டதால் அவர் அவ்வாறு கூறினார். காந்திஜிக்கு இவ்வளவு மதிப்பு ஏற்பட்டதன் காரணமென்ன? அவர் அறியாமையிலும் அச்சத்திலும் மூழ்கிக்கிடந்த இந்தியமக்களைத் தட்டி எழுப்பி, சுதந்தரத்துக்காக எத்தகைய தியாகத்தையும் செய்யக்கூடிய நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டாரல்லவா? அவரது தலைமையில் நடந்த தேசியப் போராட்டத்தில் பெண்மணிகளும் கலந்து கொண்டார்களன்றோ. இதையெல்லாம் பார்த்துத்தான் உலகம் அம்மகானைப் பாராட்டுகின்றது. அவர் எவ்வித ஆயுதமுமின்றி மிக்க வல்லமைகொண்ட பிரிட்டிஷ் சர்க்காரை அஹிம்சா கொள்கையுடன் எதிர்த்ததைக் கண்டதும் உலகமே பிரமித்துவிட்டது. அதுமுதல் உலகம் இந்தியாவின்மீது கவனம் செலுத்தலாயிற்று. இவ்வளவு அரிய சேவையைச் செய்தவர் வேறு எவருமில்லை. அம்மகானின் கட்டளைகளை நாம் சிரமேற்றாங்கிச் சரிவர நடந்தால் இன்னும் நல்ல நிலைமையை அடைந்து விரைவில் விமோசனத்தை யடையலாம் என்பதில் ஆக்ஷேபமில்லை.

---

## ஹிட்லரின் வெற்றி

சென்ற மகாயுத்தத்தில் பலியான அதாவது க்ஷீணதசை யடைந்த ஜெர்மனி மீண்டும் தலை தூக்குமா என்று அநேகர் சந்தேகித்ததுண்டு. ஏனென்றால் யுத்தமுடிவில் பிரிட்டன், பிரஞ்சு, இத்தாலி போன்ற வல்லரசுகளெல்லாம் சேர்ந்து, தோல்வியடைந்த ஜெர்மனியைப் பங்கு போட்டுக்கொள்ள பேரஞ் செய்தன. அச்சமயத்திலேற்பட்டதுதான் வார்சேல்ஸ் உடன்படிக்கை. தன்மதிப்புள்ள ஒவ்வொரு ஜெர்மானியனும் வல்லரசுகள் தங்கள் நலன் கருதிச் செய்துகொண்ட இவ்வுடன்படிக்கை ஒரு அடிமை முறியோலை (அடிமை சாஸன பத்திரம்) எனக் கருதி உள்ளங் கொதித்தான். இருப்பினும் கால நிலையையும் பலமின்மையையும் உத்தேசித்து ஜெர்மனியை ஆளும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட வான் ஹிண்டன்பர்க் ராஜதந்திரமாக நடந்து கொண்டார். ஜெர்மானியருக்கு இழிவைத்தரும் இத்தகைய வார்சேல்ஸ் உடன்

படிக்கையை உடைத்தெறிவேன் என்று கூறித் தான் இப்போது உலகத்தையே கதிகலங்கச்செய்யும் ஹெர் ஹிட்லர் ஜெர்மன் அரசியலில் மெல்ல மெல்ல ஆதிக்கம் பெற்றார். கடைசியாக சர்வாதிகாரியுமானார். இப்போது ஜெர்மனி அவர் கைக்குள் இருக்கிறது. அவர் தம் மக்களுக்கு வாக்குறுதி கொடுத்தபடி, முதலில் உடன்படிக்கையை மீறி ஜெர்மனியின் எல்லைப்புறமான ரைன்லண்டுக்குள் சேனைகளை அனுப்பி பாதுகாப்பு ஏற்படுத்திக் கொண்டார். இதைக் கண்டும் 'ஏன் உடன்படிக்கையை மீறினாய்?' என்று கேட்க எந்த வல்லரசும் துணிந்து முன்வரவில்லை. ஹிட்லருக்கு மேலும் தைரியமேற்பட்டு விட்டது. படிப்படியாக உடன்படிக்கையையே துண்டுதுண்டாகக் கிழித்து காற்றில் பறக்கவிட்டு வெற்றிக்கொடி நாட்டிவிட்டார். வல்லரசுகளின் முதன்மை ஸ்தானம் வகிக்கும் பிரான்ஸூ ஏதோ சமாதானம் கூறிக்கொண்டு தனக்குள் திருப்தியடைகிறது. மற்ற வல்லரசுகளும் இவ்வாறுதான் ஏதாயினும் சமாதானம் கூறிக்கொள்ளும். ஏனென்றால் ஹிட்லர் கை வலுத்து விட்டிருக்கிற தல்லவா!

---

## சரியான சன்மானந்தான்?

நமது சென்னை கவர்னர் சென்ற வாரத்தில் இரண்டு இடங்களில் பிரசங்கம் செய்தார். அந்த இரு இடங்களிலும் இம் மாகாண அரசியல் நிலைமையைப்பற்றியும் புது அரசியலைப்பற்றியும் பிரஸ்தாபித்தார். முதலாவதாகப் பேசிய இடம் செயின்ட் ஆண்ட்ரூஸ் விருந்து. இரண்டாவதாகப் பேசிய இடம் சென்னை சட்டசபையின் கடைசி கூட்டம். இந்த இரண்டு இடங்களிலும் அரசியலைப்பற்றிப் பேசும்போது அவர் ஜஸ்டிஸ் கட்சியினரைப் பாராட்டினார். பாவம்! அவர்கள் அதிகாரவர்க்கத்தினர் மனம் கோணாதபடி வேலை செய்து வந்ததற்கு இந்தச் சன்மானமாவது கிடைக்கவில்லை யென்றால் நியாயமா? மாண்ட் போர்ட் சீர்திருத்தத்தை அவர்கள் நன்கு நடத்திக் கொடுத்தார்கள் என்றும், அப்படியே இனியும் தென்னிந்தியர்கள் யாவரும் புதிய அரசியலையும் நடத்திக் கொடுப்பார்களென்று நம்புவதாயும், புது அரசியலைத் தகர்க்க வேண்டுமென்று கூறுவோர் அதிகமாக இங்கு இருக்க மாட்டார்களென்று நினைப்பதாகவும் அவர் கூறி யிருக்கிறார். மாண்ட்போர்ட் சீர்திருத்தத்தை ஜஸ்டிஸ் கட்சியினர் சர்க்காருக்குத் துணையாக இருந்து நடத்திக் கொடுத்ததால்தான் சர்க்காரின் தலைவராகிய கவர்னரிட மிருந்து பாராட்டுதலைப் பெறுகிறார்கள். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்ததால் மகாஜனங்களுக்கு எவ்வித ஹிதத்தையும் செய்ய முடியாமற் போகவே மக்கள் அவர்களைப் புறக்கணிக்கின்றனர். இப்பால் நடந்த எந்தத் தேர்தலிலும் அவர்கள் வெற்றிபெறவே இல்லை. புதிய அரசியலைத் தகர்க்க வேண்டுமென்று சொல்பவர்கள் இப் பிரதேசத்தில் அதிகமாக இருக்க மாட்டார்களென்று நம்புவதாகவும் கூறுகிறார். காங்கிரஸ் மகா சபை புதிய அரசியலைத் தகர்ப்பதென்று தீர்மானித்திருக்கிறது. அதையே மக்கள் ஆதரித்து வருகிறார்கள். இதிலிருந்து கவர்னரின் நம்பிக்கை தவறானதென்று நன்கு தெரிகிறதல்லவா? சட்டசபையில் அவர் பேசுகையில் வரப்போகும் தேர்தலில் காலித்தனம் எதுவும் நடக்காதபடி பார்த்துக்கொள்ள வேண்டுமென்று உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளை பிறப்பித்திருப்பதாகக் கூறியது சந்தோஷிக்கத்தக்க விஷயமேயாகும்.




# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)

மாபத்கான் மெல்ல நடந்து ஒரு மரத்தடிக்குச் சென்றான். அங்கே அவனுடன் சதியாலோசனை செய்த பாச்சா சாஹேபு படுகாயப்பட்டு இறக்கும் தருவாயில் உதிர வெள்ளத்தில் புரண்டு கிடந்தான். மாபத்கானைக் கண்டதும் அவன் எழுந்திருக்க முயன்றான். ஆனால் முடிய வில்லை.

"அல்லா, அல்லா...நான் செய்த பெருந்தவறை அல்லா மன்னித்து விடுவார். நீ செய்த சதி! ஹுசேனை வஞ்சகமாய் சிறையிலிட்டாய்! நான் உனக்குச் செய்த தவறு உனக்கு வேண்டியது! அது உனக்கு அல்லா அனுப்பிய தண்டனை. நான் செய்த பிழைக்கு இதோ தண்டனை யடைந்து விட்டேன்......" என்று சொல்லும்போது மாபத்கான் போவதற்குத் திரும்பினான்.

"போகாதே, மாபத்கான் அதற்குள் போகாதே. நான் ஒரு அரிய செய்தி சொல்லுவேன். நீ இதை உனது பகைவர்களான லக்ஷ்மிபாயிக்கும் ஹுசேனுக்கும் தெரியப்படுத்த வேண்டும். அதாவது.........(சற்றுநேரம் மௌனமாய் கண்களை மூடிக்கொண்டிருந்தான்) அதாவது...அதை நீ கண்டிப்பாய் அவர்களுக்குத் தெரிவிக்கின்றாயா? அல்லாமேலே ஆணை! பூ! உனக்கு ஆணையும் உண்டா! கோபிக்காதே இதோ சொல்லி விடுகிறேன். அதாவது...ஆற்காட்டில் அவளையும் அவளது தமயனையும் சிறை செய்ததும் பிறகு க்ளைவ் துரைக்கு மிரட்டல் கடிதம் எழுதியதும் என்னுடைய தூண்டுகோலின்பேரிலே செய்ததே தவிர ராஜாசாஹேபுவின் பேரில் சிறிதளவேனும் பிசகில்லை, நான் செய்த அடாத குற்றங்களை இப்பொழுது நான் அல்லா முன்பாக ஒப்புக்கொண்டு அவர் விதித்த தண்டனையை அனுபவிக்கிறேன். ஏ, அல்லா! ஏ, அல்லா! ஏ, அல்லா!......" என்று கதறியதும் அம்மனிதனுக்கு மூச்சு ஒடுங்கி விட்டது.

இவனது வார்த்தைகள் முழுவதும் ஒன்றுகூட விடாமல் மூவரும் செவிகொடுத்துக் கேட்டார்கள். பழைய ஞாபகம் வந்ததும் லக்ஷ்மிபாயின் இரத்தம் உறைந்தது.

இப்பொழுது அநேகமாய் விடியற்காலை யாகிவிட்டது. அனேகமாய் அந்தக் குதிரைவீரர்கள் மாபத்கானோடு போய்விடுவார்கள் என்று நினைத்தான் குரூபி. ஏனென்றால் இது வரையிலும் அவர்களுடைய கண்ணில் அகப்படாமல் தாங்கள் தப்பித்துக்கொண்டு இருந்து விட்டபடியால் இனி மேல் அகப்பட மாட்டோம் என்ற தைரியம்.

"டே, டே! இங்கே பாருங்கோடா! திருட்டுப் பசங்கள்!" என்று ஒரு சிப்பாய் கூச்சலிட்டான். பிறகு எல்லோரும் நமது ஆசாமிகளைப் பார்த்து விட்டார்கள். உடனே கத்தியை உருவியவனும், ஈட்டியை நீட்டியவனும், குதிரைமேலே பாய்ந்தேறியவனும், குதிரையிலிருந்து கீழே குதித்தவனும், குதிக்கும்போது கீழே விழுந்து புரண்டவனும் ஆக எல்லோருமாகத் திரண்டு காதலர்களையும் அவர்களின் அதிசய சேவகனையும் வளைத்துக் கொண்டார்கள்.

"டேய், கொண்டுவா துப்பாக்கியை! கொண்டு வாடா அந்த சீமைத் துப்பாக்கியை! சுடு மூணுபேரையும்! பிணமாய்க் கட்டிக் கோட்டைக்குக் கொண்டு போவோம்" என்று கர்ஜித்தார் மாபத்கான்.

லக்ஷ்மிபாய் பயத்தினால் ஸ்மரணை இழந்து விட்டபடியால் அவளை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையில் "மெய்கினியை" உருவி வைத்துக்கொண்டான் ஹுசேன். குரூபி அஞ்சாத நெஞ்சுடையவனாக இருந்தபோதிலும் தனது உயிரைப்பற்றியே கவலை யில்லாவிடினும் தனது அருமையிலும் அருமையாகிய காதலர்களிருவரின் க்ஷேமத்தைக் கோரியவனாதலால் கொஞ்சம் அச்சமடைந்தான்.

வெட்டு, வெட்டு! குத்து, குத்து! பிடி, பிடி!" என்ற பயங்கர சப்தம் சிப்பாய்களிடையே யிருந்து கிளம்பி காது செவிடுபட ஒலித்தது.

"ஏ, சிப்பாய்களே! இது யார் தெரியுமா? இராஜகுமாரி லக்ஷ்மிபாய்! இவளது கால்தூசியில் ஒன்று சேதமடைந்தாலும் உங்கள் கதி என்னவாகும் என்று யோஜித்துப் பாருங்கள்" என்று கூவினான் குரூபி. அவன் தொனி கம்பீரமாய் ஒலித்தது. அதைக் கேட்டமாத்திரத்திலே சிப்பாய்கள் தங்கள் கத்திகளை உறையில் போட்டு விட்டார்கள். சர்தார் மாபத்கான் என்ன கடுமையான உத்தரவு. அதட்டி அதட்டி கூவினாலும் அது ஒரு சிப்பாயினுடைய காதிலே யாயினும் ஏறவில்லை. மாபத்கானுக்கு அடங்காத கோபம் பொங்கி எழுந்தது. அப்பொழுது கொம்புகளும் தாரைகளும் பேரிகைகளும் முரசுகளும் சப்தித்து முழங்கும் ஓசை சமீபத்தில் வந்து கொண்டிருந்தது.

"மஹாராஜா வந்துவிட்டார்! மஹாராஜா வந்துவிட்டார்!" என்று ஒரே கூக்குரல் கிளம்பியது. அதுபோலவே மஹாராஜா புடைசூழ தானே நேரில் வந்துவிட்டார். அவர் சகல லக்ஷணமும் பொருந்திய ஓர் புரவியின் பேரில் வீற்றிருந்தார். பாலரவி தனது இளங்கதிர்களை அவர் முகத்தில் வீசினான். ஏற்கனவே கோபாவேசத்தினால் இரத்தம்போல் சிவந்திருந்த அவரது முகம் அக்கினிபோல் ஜ்வாலை விட்டு எரிந்தது. மீசைகள் படபட வெனத் துடித்தன. கண்கள் தமது இருப்பிடத்தினின்றும் பிடுங்கிக் கொண்டு பறந்து செல்லத் தயாராய் இருப்பனபோலத் தோன்றின. இளம்

வெய்யல் ஒளியில் அவரது கையிலிருந்த வஜ்ரவாள் பளீர் பளீர் என ஜ்வலித்தது. உலகத்தையே பஸ்மீகரப்படுத்துவதற்கு அவதரித்த ருத்ரமூர்த்தியைப் போல் விளங்கினார். அவரைக் கண்ட எல்லோரும் அஞ்சினார்கள் ஹூசேன் கூட அஞ்சினான்; அவனது அதிசய சேவகன்கூட கொஞ்சம் அஞ்சினான்.

"எங்கே அந்த ராஜதுரோகி, ஹூசேன்! இன்னுமா அவனை உயிருடன் வைத்திருக்கின்றீர்கள்?" என்று மிருகேந்திரனைப்போல் கர்ஜனை செய்தார். உடனே மாபத்கான் தன் கையிலிருந்த துப்பாக்கியால் ஹூசேனை குறிவைத்துச் சுட்டுவிட்டான். ஆனால் குரூபி தன் குதிரையினின்றும் எழும்பி ஒரே பாய்ச்சலாக துப்பாக்கி முனைக்கும் ஹூசேனுக்கும் இடையில் பாய்ந்தான். துப்பாக்கி ரவை அவனது விலாவில் பாய்ந்து பொத்தென்று கீழே விழுந்தான். இவ்வளவும் இமைகொட்டும் நேரத்திற்குள் நடந்துவிட்டது. எல்லோரும் திகைத்து நின்றார்கள். தனது குறியை குரூபி தடுத்துவிட்டபடியால் தன் துப்பாக்கியை மறு முறையும் ஹூசேனை நோக்கி உயர்த்தினான் மாபத்கான். ஆனால் ஹூசேன் தன் குதிரையினின்றும் மின்னல் ஒளிபோல் பாய்ந்து மாபத்கானை தனது "நெய்கினி"யினால் தாக்கினான். மறு வினாடி மாபத்கானின் தலை துண்டிக்கப்பட்டு கீழே விழுந்து புழுதியில் புரண்டது. அவன் முண்டம் கையில் துப்பாக்கியைப் பிடித்தபடியே பொத்தென்று பூமியில் சாய்ந்தது. குரூபி தன் உயிரைக்கொடுத்து ஹூசேனின் உயிரைக் காப்பாற்றியதும், மாபத்கானை உடனே எமலோகத்திற்கு அனுப்பி அதற்கு உடனே பழி தீர்த்ததும் எல்லாம் ஒரு நொடியில் நடந்துவிட்டன. அப்போது ஹூசேன் கீழே விழுந்த குரூரன் என்ற தனது அருமைச் சேவகனைத் தூக்கித் தன் மார்பில் சாற்றிக்கொண்டான். லக்ஷ்மிபாய் 'ஓ' என்று அலறிக்கொண்டு அவன்பேரில் வந்து விழுந்து புரண்டு அழுதாள். எல்லாம் கண்கொண்டு பார்க்கமுடியாத துயரக்காட்சியாய் இருந்தது.

தனது உயிரையே அர்ப்பணம் செய்த அந்த அற்புத தியாகமூர்த்தி உயிர்துறக்கும் தருவாயிலிருப்பதைக் கண்ட ராஜாவுக்கே மனம் இளகிவிட்டது. அவருடைய இருதயம் மட்டும் இரும்பாலாகியதா என்ன? மாமிசத்தாலாகிய தல்லவா?

"ராஜாவைக் கூப்பிடுங்கள்" என்று அம்மனிதன் வேண்டிக் கொண்டான். அரசனும் அவனருகில்போய் உட்கார்ந்தார்.

"மஹாராஜ்! நான் தங்களுக்குப் பெரிய ரகசியம் ஒன்றை வெளியிடப் போகிறேன். தாங்கள் அதை நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. அது முற்றிலும் உண்மை. அதற்கு ஆகவேண்டிய ஆதாரம் டில்லி அரண்மனையில் கிடைக்கும். நானோ இன்னும் சிறிது நேரத்தில் எமலோகம் செல்லப்போகிறேன். ஏ, கடவுளே! என் எண்ணம் பூர்த்தியாகி நான் பார்க்காமல் போகிறேனே!" என்று புலம்ப ஆரம்பித்து கண்ணால் தாரை தாரையாய்க் கண்ணீர் உதிர்த்தான். முன்னமேயே ஆறாய்ப் பெருகிக்கொண்டிருந்த கண்ணீர் ஹூசேன் கண்ணில் வெள்ளமாய் புரண்டு வழிந்தது. இந்தக் காட்சி அரசரின் கலங்காத நெஞ்சத்தையும் கலங்கவைத்தது. இன்னும் சிறிது நேரத்தில் அம்மனிதன் உயிர் துறந்துவிடுவான் என்று கண்ட ராஜா, "நண்பா, நீ சொல்லவந்த செய்தியை சீக்கிரம் சொல்" என்றார்.

"ஏ! ஏ! சொல்லுகிறேன். ஆனால் அதை உண்மை என நம்பி அதன் படி நடந்துகொள்வதாக வாக்களியுங்கள்" என்றான். அவனிடத்திலிருந்த ஒருவித அபூர்வசக்தி அரசனுக்குக்கூட அபார நம்பிக்கையை உண்டுபண்ணி விட்டது.

"நீ கோரியபடியே வாக்களித்தேன்" என்றார்.

"ஆ! ஆண்டவன் உங்களுக்கு அருள்புரிவார். நான் சொல்லும் கதையை கவனமாய்க் கேளுங்கள்—சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னால் நம்—இல்லை. உங்களது மஹாராஷ்டிர ராஜதானியாகிய சாத்தாராவைச் சேர்ந்த ஒரு சிற்றரசன் இருந்தார். இவர் புரந்தரக் கோட்டையில் ஒரு சேனாதிபதியாய் இருந்துவந்தார். இவருக்கு மூன்று வயதில் ஒரு அழகிய ஆண் மகவு இருந்தது. டில்லி பாஷாக்களுடன் யுத்தம் நடந்தபோது பகைவருடைய ஓர் சிப்பாய் இந்தக் குழந்தையைக் களவாடிக் கொண்டுபோய்விட்டான். யுத்தத்தில் கைதியான சுமார் முன்னூறு முகம்மதிய சிப்பாய்களை விடுதலை செய்தால்தான் இந்தக் குழந்தையைத் திருப்பிக் கொடுப்பதாக நிருபம் வரவே புரந்தரக் கோட்டை சேனாதிபதியாகிய குழந்தையின் தகப்பன் அப்படியே செய்துவிட்டான். ஆனால் குழந்தை உயிரோடு திரும்பிவரவில்லை. ஒரு கூடையில் அந்த பாதகர்கள் குழந்தையின் எலும்பை அனுப்பிவைத்தார்கள். குழந்தையின் தாய் உடனே உயிர் துறந்தாள். தந்தையோ பைத்தியம் பிடித்துக் காட்டுக்கு ஓடியவர் அதன் பிறகு அகப்படவேயில்லை. ஆனால் உண்மையில் அந்தக் குழந்தை கொல்லப்படவில்லை. அதை டில்லி அரண்மனையில் வேலை செய்து வந்த ஒரு முஸ்லீம் கிழவியிடம் விட்டு வளர்த்துவரும்படி ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. தனது இரத்த நாளங்களில் இராஜவம்சத்திய உதிரம் ஓடிக் கொண்டிருந்த படியால் அந்தக் குழந்தை உலக மெல்லாம் தன் புகழ் விளங்க அதி பராக்கிரமசாலியாய் விளங்குகின்றான். இப்போது அவன் ஒரு முகம்மதியனாகக் கருதப் பட்டிருந்தாலும் அவன் உங்களது இராஜ வம்சத்தில் பிறந்த மஹாராஷ்டிர வீரனே யாவன். அவனது உண்மைப் பெயர் ராமாஜி. அந்த இராமாஜியைத் தேடி நான் அநேக வருஷம் அலைந்து விட்டுக் கடைசியில் ஆர்காட்டில் சந்தித்தேன். ஆனால் காலக் கொடுமை—(சற்று நேரம் மௌனமா யிருந்தான்.) அந்த ராமாஜி யார் தெரியுமா? இதோ இருக்கின்றானே எனது அருமை ஹுசேன்! இவன் தான் ராமாஜி! ராமாஜி! ஓ எனது அருமை ராமாஜி!!" என்று கூறிக் கொண்டு ஹுசேன் என்ற ராமாஜியைத் தழுவிக் கொள்ள முயன்றான்.

இந்த அதிசயமான ரகசியத்தைக் கேட்டதும் லக்ஷ்மிபாய் தனது ஆறாத் துயரத்தையும் மறந்தனள். ராமாஜி (இனி நாம் ஹுசேனை ராமாஜி என்று அழைக்க வேண்டாமா?)க்கு எல்லாம் ஒரே குழப்பமாகவே யிருந்தது.

"ராமாஜி! எனது அருமை ராமாஜி! க்கு...............என் உயிருக்கு உயிரான என் கண்ணான லக்ஷ்மிபாயை மணம் செய்வித்து என் சிறு ராஜ்யத்தில் உங்களிருவருக்கும் பட்டம் கட்டுவித்துப் பார்க்காமல் போகிறேனே, கடவுளே, கடவுளே." என்று புலம்பினான்.

இந்தப் புலம்பலைக் கேட்டதும் குரூரன் யார் என்று இலக்ஷ்மிபாய் அறிந்து கொண்டாள். அவளது துயரத்திற்கு கரை கிடையாது.

"ஏ, அண்ணா, உத்தமஜீ" என்று அலறிக் கொண்டு அடித்து மோதி விழுந்து அழுது புரண்டாள். அந்த மனிதன் லக்ஷ்மிபாயின் தமயனை உத்தமஜீ என்று அறிந்ததும் எல்லோரும் பிரலாபித்தார்கள். ராமாஜியின் துயரத்தை வாசகர்களே ஊகித்துக் கொள்ளட்டும். அந்த சோகமான காட்சியைக் கண்ட கல்லும் கரையும் போலிருந்தது. மஹாராஜாவின் திடமான மனமே கரைந்து அவரது மாக்ஷிமை தங்கிய கண்களின் வழியாய்க் கண்ணீராய் வடிந்தது. விசன மென்பதே இன்னதென்று தெரியாத கல் நெஞ்சையுடைய படை வீரர்களே அக் காட்சியைக் கண்டு கோவென்று அலறினார்கள்.

உத்தமஜிக்கு தா வர மூச்சு ஒடுங்கிக் கொண்டு வந்தது. பிறகு அவரிடமிருந்து ஒவ்வொரு வார்த்தைகளில், அவன் ஆற்காட்டில் பகைவரிடம் சிக்கிக் கொண்டதும் அவர்களுடன் செய்த யுத்தத்தினால் தனது அவயவங்களை இழந்து விட்டுத் தப்பித்துக் கொண்டதும் பிறகு சரீரம் குணப்பட்டதும் இலக்ஷ்மிபாயும் ராமாஜியும் இருக்கும் தஞ்சாவூருக்கு மாறு பெயரில் வந்து அவர்களின் பேரில் சதா கண்ணும் கருத்துமாய் இருந்து வந்ததும் அவர்களிடையே காதல் வளர்ந்து விட்டதைக் கண்டு தான் களிப்படைந்ததும் தெரிந்து கொண்டார்கள்.

ராமாஜி உத்தமஜியின் தாயினுடன் பிறந்த அம்மான் மகன். இவனை மூகம்மதியர்கள் கொலை செய்து விட்டதாக எல்லோரும் எண்ணியிருந்த போதிலும் லக்ஷ்மிபாயின் (உத்தமஜியின்) தாய்க்கு மட்டும் நம்பிக்கை யில்லாமல் இருந்தது. ராமாஜியைத் தேடிப் பிடித்து அவனுக்கேதனது ஏக புதல்வியை மணம் செய்து இழந்து போன தனது தமயன் சிற்றாரில் பட்டம் கட்டி வைக்க வேண்டும் என்பது அவளது பிரியம். அவளது விருப்பத்தின் படியே உத்தமஜீ அநேக வருஷங்களாய்த் தேடியும் பயனில்லை. இவ்வளவு விஷயமும் அவர்களுடைய பந்துவாகிய தஞ்சை மன்னருக்குத் தெரிந்ததே. பிறகு உத்தமஜீ தற்செயலாய் ராமாஜியை ஆற்காட்டில் கண்டதும் தான் விபரம் அவனிடம் தெரிவிப்பதற்குக் கூட அவகாச மில்லாமல் பலவித விபரீதங்கள் உண்டாகியதும் பிறகு நடந்தவைகளும் தெரிவித்தான்.

"கோவிந்தா! நாராயணா! ராம மூர்த்தி!" என்று மூன்று சொற்கள் சொன்னான் உத்தமஜீ. பிறகு மூச்சு நின்று விட்டது. அந்த உத்தம வீரனுடைய ஆத்மா பரந்தாமனின் பாதார விந்தம் அடைந்து விட்டது என்று எல்லோரும் அறிந்தார்கள்.

* * * *

சில நாட்கள் கழிந்து இளவரசன் இராமாஜிக்கும் இளவரசி லக்ஷ்மிபாயிக்கும் தஞ்சாவூர் அரண்மனையிலேயே திருமணம் நடந்தது. அதற்கு விஜயம் செய்திருந்த ராஜாதி ராஜாக்களோடு சென்னப்பட்டினத்திலிருந்து ராபர்ட் க்ளைவ் துரையும் வந்திருந்தார். மிக உயர்வான ரிவால்வர் ஒன்றை இவர் ராஜா—ராமாஜிக்கு சன்மானம் செய்தார்.

முற்றிற்று.



# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாது௵ மார்கழிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜ்ரி 1355,
இங்கிலீஷ் 1936௵ டிசம்பர்மீ—1937௵ ஜனவரிமீ

| மார்கழிமீ | டிசம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [புண்ணியகாலம் |
| 1 | 15 | செவ் | துதி60 | மூல6-3 | அமி6-3சித் | சந்திர தெரிசனம், ஷடசீதி |
| 2 | 16 | புதன் | துதி2-23 | பூரா9-48 | அமி60 | கணிதாரம்பம் செய்ய |
| 3 | 17 | வியா | திரி3-48 | உத்12-28 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 4 | 18 | வெள் | சது4-13 | திரு14-3 | மர14-3சி | நாக பூஜா, நாக பஞ்சமி |
| 5 | 19 | சனி | பஞ்3-20 | அவி 14-28 | சி14-28அ | சஷ்டி, ஸ்காந்த சஷ்டி |
| 6 | 20 | ஞா | சஷ்1-20 சப்58-13 | சத13-45 | சித்60 | மித்ரசப்தமி, சூரிய விரதம், கரிநாள், அவமாகம் |
| 7 | 21 | திங் | அஷ்53-53 | பூர12-0 | மர12-0சி | மகராயனம் நா-57-30, ஏற் |
| 8 | 22 | செவ் | நவ48-30 | உத்9-5 | அமி9-5சித் | [றம் ஸ்தாபிக்க |
| 9 | 23 | புதன் | தச42-23 | ரே5-18 | மர60 | கரிநாள் |
| 10 | 24 | வியா | ஏகா35-35 | அஸ்0-40 பர55-30 | அமி0-40சி | முக்கோட்டி ஏகாதசி, வை குண்ட ஏகாதசி |
| 11 | 25 | வெள் | து28-23 | கி✻51-12 | சி51-12மர | கிருத்திகை, பிரதோஷம் |
| 12 | 26 | சனி | திர21-8 | ரோ44-28 | அ44-28சி | அநுமந்த விரதம் |
| 13 | 27 | ஞா | ச○14-0 | மிரு39-23 | சித்60 | பௌ○, நடராஜாபிஷே கம் (இரவில்) [பூஜை |
| 14 | 28 | திங் | பௌ7-23 | திரு34-58 | ம34-58அ | ஆருத்திரா தரிசனம், சிவ |
| 15 | 29 | செவ் | பிர1-35 துதி57-0 | புன31-38 | சித்60 | |
| 16 | 30 | புதன் | திரி54-5 | பூச29-33 | சித்60 | |
| 17 | 31 | வியா | சது52-58 | ஆயி29-5 | சித்29-5அ | |
| 18 | 1937௵ ஜனவரிமீ 1 | வெள் | பஞ்53-45 | மக30-33 | மர30-33சி | |
| 19 | 2 | சனி | சஷ்56-13 | பூர33-43 | சி33-43அ | |
| 20 | 3 | ஞா | சப்60 | உத்38-35 | அமி60 | |
| 21 | 4 | திங் | சப்0-23 | அஸ்44-53 | சி44-53பி | |
| 22 | 5 | செவ் | அஷ்6-10 | சித்52-10 | சித்60 | |
| 23 | 6 | புத | நவ12-28 | சுவா59-18 | சித்60 | |
| 24 | 7 | வியா | தச19-5 | விசா60 | சித்60 | திருதின ஸ்பிருக் |
| 25 | 8 | வெள் | ஏகா25-15 | விசா7-8 | சித்60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 26 | 9 | சனி | து30-35 | அனு13-50 | சித்60 | தானியம் செலவிட |
| 27 | 10 | ஞா | திர34-53 | கே19-88 | ம19-28அ | குரு கிழக்கே உதயம் |
| 28 | 11 | திங் | சது37-35 | மூல23-50 | சி23-50மர | தானியம் செலவிட |
| 29 | 12 | செவ் | அ●39-5 | பூரா26-50 | சி26-50அ | சர்வத்திர அமாவாசை |
| 30 | 13 | புத | பிர38-58 | உத்28-30 | அ28-30சி | போகி பண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி | 9-துலா-செ<br>11-மகா-புத<br>16-கும்ப-சுக் | | |
| சுக் | | | |
| ரா-கு<br>பு-கு | | | செ |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.